

ராஜமணடரியில் உருவாக்கபபட்ட ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி மாதிரி கோயில

கோதாவரி நதிக்கரையில கடடப் பட்ட ஸ்ரீ வேஙகடேஸ்வர சுவாமி படிததுறையை திரு. செனனு ரெட்டி அவாகள திறநது வைததார்.



தி. தி. தே. ஆஸ்தான வித்வான் திரு. உபபலூரி கணபதி சாஸ்திரி அவர்கள், ஆந்திர மாநில முதல்வா அவர்களால் கௌரவிக்கப்படுகிறா.



கோதாவரி நதிககரையில் யாத்திரிகாகள் குளிக்கும் காட்சி







“பலலாண்டு பல்லாண்டு பல்லாயிரததாண்டு
பல் கோடி நூறுயிரமும்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணு உன்
சேவடி செவ்விதிருக்காப்பு
அடியோமோடும் நின்னேடும் பிரிவினறி
ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும்
பல்லாண்டு
படைபோாககு முழங்குமப் பாஞ்ச சன்னியமும்
பல்லாண்டே”

திருப்பலலாணடு—பெரியாழ்வார்.







தனிப்பிரதி 50 காசு
வருடச் சந்தா ரூ. 6

*சிறப்பாசிரியர்*
**திரு. பி. வி. ஆர். கே. பிரசாத், I.A.S,**
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர்*
**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

*அச்சிடுபவர்*
**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி

முழு விவரங்களுக்கு
EDITOR
'Sapthagiri'
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.




# ஸப்தகிரி

அக்டோபர் 1979
மலர் 10
இதழ் 5

## உள்ளுறை

| | பக்கம் |
|---|---|
| ஆசிரியர் உரை | 3 |
| மகிஷாசுரமாத்தினி | 5 |
| கங்கா ஸ்நானம் ... | 7 |
| கும்பகோணம் மஹாமகத்தின் சிறப்பு ... | 9 |
| குரங்கு வாலி, மனித வாலி, தெய்வ வாலி ... | 11 |
| ஸ்ரீ பெரியாழ்வார் வைபவம் ... | 13 |
| உலகத்தோடு ஒட்ட ஒழுகல்—பல கற்றும் ? ... | 15 |
| நினைவின் அலைகள் | 16 |
| சுககிரன் .. | 17 |
| திருமலை ஒழுகு ... | 19 |
| முக்கவி கண்ட காப்பியம் ... | 22 |
| சிறையிருந்த செல்வி ... | 23 |
| வேங்கடத்துச் செங்கண்மால் சேவடிக்கு... விண்ணப்பம் ... | 25 |
| துறவியலின் மேம்பாடு ... | 27 |
| ஆத்ம ஞானம் ... | 29 |
| கீதை காட்டும் நல்வழி ... | 33 |
| ஸ்ரீ கண்ணன் வளர்வெட்டு ... | 35 |
| செய்திச் சுருக்கம் ... | 37 |
| ராசி பலன் ... | 39 |

அட்டைப் படம்: நரகாசுர வதை



# ஆசிரியர் உரை

*கல்வியெனும வேரின் உறுதியினால பண்பாடு எனனும் பூ மலர்ந்து அறிவு எனும் கனி கிடைக்கின்றது கல்வியின குறிககோள், பணபாடுடைய, கட்டுப்பாடுடன கூடிய, தன்னம்பிக்கை மிக்கு விளங்கும் ஒரு மனிதனை உருவாக்கி, அவனுள் உறையும் ஆன்மீக, தார்மீக உணர்வுகளை வளரச்செயது, அவனுடைய உள்ளததையும், உடலையும் பண்படுத்துவதேயாம். எளிய வாழ்க்கைக கூறுகளும், சீரிய சிந்தனை உணர்வுகளும் அவனிடத்தில் விளங்கினால்தான் அவன் கற்ற கல்விக்குப் பெருமை. அவ்அடிப்படைக் கருத்திற் கொண்டே ஒவ்வொரு அரசும் கோடிக்கணக்கில் ரூபாயை கல்வித் துறைக்கென ஒதுக்குகின்றது. இதனை எவ்வளவு மாணவர்கள், ஆசிரியர்கள், எத்தனை கல்வி நிலையங்கள் உணர்நதுள்ளன? செலவழிப்பது கோடிகணக்கில் எனின், இன்று தங்கள் பொறுப்பை உணர்ந்தவர்கள் நூற்றுக்கணக்கில்தான எனபது ஒரு கசப்பான உண்மையாகும.*

*ஓர் இயக்கம நனகு செழிததோங்கும் சமயத்து, அவ்இயக்கத்தின் வளர்ச்சிக்குப் பல வகைகளில் காரணமாக இருந்த நிறுவனம அளவிலா பூரிப்படையும், பெருமை கொள்ளும. நிறுவனததின் குறிககோள் நடுவில் சிதைந்துவிட்டால் அல்லது இறுதியில் அதன பலன்கள் மாறாக இருப்பின் நிறுவனத்திற்கு மிஞ்சுவது ஏமாற்றங்களேயாம். தான் வளர்த்தச் செடி, தான் எதிர்பார்த்த கனியை வழங்கினால்தான் செடிக்குச் சிறப்பு; செடியை நட்டவனுக்குப் பெருமை. இது கல்வி நிறுவனங்களுக்குச் சாலப் பொருந்தும்*

*கல்வி நிலையங்கள், பட்டதாரிகளை உருவாக்கும ஒரு தொழிறசாலையாக விளங்காமல், வரவு செலவு பார்க்கும் வியாபாரத தலமாக அமையாமல் நாட்டின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் இயக்கமாக விளங்குதல் அவசியம். இன்று இந்தியாவில் உள்ள பல்கலைக்கழகங்கள் கல்வித்துறையில் வகிக்கும் முக்கியத்துவம் எவ்வகையில் உள்ளது எனபதை இன்று நாம் சிந்திதது பார்க்க வேண்டியது மட்டுமல்லாமல், இதில் மாணவர்களின பொறுப்பும் பெறறோர்களின் பங்கும் எவ்வகையில் திகழ்கின்றன எனபதையும் நினைததுப் பார்ககவேண்டிய நிலையில் உள்ளோம். பல்கலைக்கழகங்களில் படிப்புக்காக ஒதுக்கப்படும் கால அளவைவிட வனமுறைகள் கிளர்ச்சிகள் போன்ற மாணவ சமுதாயத்தினர்க்கு சம்பந்தப்படாத, தேவையற்ற விஷயங்களுக்குச் செலவிடப்படும் காலம் உயர்ந்து வருவது வருந்துதற்குரிய செய்தி; தீர்வுகாண வேண்டிய பிரச்சனை. இதற்குக் காரணம், ஆசிரியர்க்கும் மாணவர்க்கும் இடையே நிலவ வேண்டிய, குருகுலவாசம் நிலவிய காலத்தில் இருந்த அளவு எதிர்பார்க்கா விட்டாலும் அப்போது இருந்த உள்ளார்ந்த மானசீகமான அடிப்படை உறவு இன்று கற்பனை செய்ய முடியாத வகையில் தாழ்ந்திருப்பதேயாகும். மேலும் எந்த அளவு பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை தங்களுடைய ஆதிக்கத்தில் வைத்துள்ளனர் அல்லது அப்பிள்ளைகள் தங்கள் பெற்றோர்கள் காணும் கனவிற்கு வடிவம் தர எந்த அளவு ஆர்வம் காட்டுகின்றனர், தங்கள் கடமையினை உணருகின்றனர் என்பதைப் போன்ற ஐயங்கள் நம் கண்முன் நிழலாடுகின்றன. இதுதகையக் குறைபாடுகளுடனு, அடிப்படை பலவீனங்களுடன், எதிர் நீச்சல் போட வேண்டிய நிலையில் இன்றைய பல்கலைக் கழகங்கள் உள்ளன*

*இப்பல்கலைக்கழகங்களில், இவ்வாண்டு செப்டம்பர் மாதம் தனது வெள்ளி விழாவைக் கொண்டாடிய திருப்பதி ஸ்ரீவேங்கடேஸவரா பல்கலைக்கழகமும் ஒன்று எனற ஆராயச்சியினை மேற்கொள்ளாமல், ஒரு பல்கலைக்கழகத்தின் சராசரி வளர்ச்சி இங்கு உள்ளதா எனப்பார்க்குமிடத்து, நிச்சயமாக அப்பல்கலைக்கழகத்தின் வளர்ப்புத்தாயாக இருந்துவரும் திருமலை திருப்பதி தேவஸ்தானம் பெருமிதமே அடைகின்றது. இன்றைக்கு 25 ஆண்டுகளுக்கு முன்பு, மறைந்த முன்னாள் முதல்வர் ஆந்திர கேசரி திரு. தங்குடூரி பிரகாசம் மற்றும் முன்னாள் ஆத்திர மாநில உதவி முதல்வரும் இன்றைய ஜனாதிபதியுமான திரு. என. சஞ்சீவ ரெட்டி ஆகியோரின் பெரும் முயற்சியாலும், திருமலைக் கோயிலின் பொருளுதவியாலும், உருவாகிய ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகம, அக்கழகததின் துணைவேந்தர்களாக பணிப்புரிந்திட்ட டாக்டர். கோவிந்தராஜுலு நாயுடு, திரு. வாமன் ராவ், டாக்டர். ஜகன்னாத ரெட்டி, டாக்டர். சச்சிதானந்த மூர்த்தி, மற்றும் இன்றைய துணைவேந்தர் டாக்டர். சாந்தப்பா ஆகியோரின் அயராத உழைப்பினாலும் இப்பல்கலைக் கழகம் பல்வேறு துறைகளில் வளர்ச்சி கொண்டு, இன்று தலைசிறந்த பல்கலைக்கழகங்களில் ஒன்றாக விளங்குகின்றது. அப்பல்கலைக்கழகம் மேலும் விரிவடையும் வகையில், தி. தி. தேவஸ்தானம் ஒவ்வொரு ஆண்டும் கணிசமான நிதி உதவி வழங்க அவற்றினை நன்முறையில் பயன்படுத்தி வரும் பல்கலைக்கழகத்தினைக் கண்டு தேவஸ்தானம் மன நிறைவே அடைகின்றது. மேலும் கலை மற்றும் அறிவியல் துறைகளில் பல்வேறு பயிற்சி வகுப்புக்களைப் புகுத்தி, தனக்கென்ற ஒரு தனி முத்திரையை ஏற்படுத்திக்கொண்டுவரும் இப்பல்கலைக்கழகத்தினைக்கண்டு தேவஸ்தானம பெருமையே கொள்ளுகின்றது. கைம்மாறாக, ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகமும், தி. தி. தேவஸதானததின் கோரிக்கைகளுக்கு செவிசாய்க்கும் வகையில் தனது கலைத்துறையில் (இலக்கியம்) அன்னமாச்சார்யா கவிதைகள் சம்பந்தப்பட்ட வகுப்புக்களைப் புகுத்துதல், பல்கலைக் கட்டிடங்களுக்கு ஆழ்வார்களின் பெயரிடுதல் போன்ற நற்காரியங்களை மேற்கொண்டு வருகின்றது*

*ஆயினும், மகன் பலதுறைகளில் சிறந்த விளங்கினாலும் மேலும் அவன் பார்புகழும்வண்ணம் சிறக்கவேண்டுமென விருமபும ஒரு தாயின் நிலையில், ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகம் குறிபிடத்தக்க வகையில் சிறந்து விளங்கினாலும, மேலும் அது வளர்ச்சியுற்று பல கல்வி நிறுவனங்களுக்கு முன்னோடியாகத் திகழும் வகையில் ஆலோசனை ஒன்று வழங்க, தி. தி. தேவஸ்தானம் விரும்புகின்றது. ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகம் அறிவியல் துறையில் ஒரு தனிப்பட்ட இடத்தை அடைய வேண்டியது மட்டுமன்றி, நாட்டின் எதிர்கால தலைவர்களாக, வழிகாட்டிகளாக விளங்க வேண்டிய மாணவச் சமுதாயத்திரினிடையே நற்சிந்தனை, சுயக்கட்டுப்பாடு, நேர்மை, பணிவு, எளிமை ஆகிய பண்புக்கூறுகள் வளருவதற்குக் காரணமான சமய உணர்வு தழைத்தோங்கிட இந்திய கலாச்சாரத்தின் உயிர்நாடியான சமயக் கல்வியின் அவசியத்தை மனதிற்கொண்டு, இந்து சமயம் சம்பந்தப்பட்ட துறை ஒன்றினை ஊக்குவிககவேண்டும் என்பதே தி. தி. தேவஸ்தானத்தின் பேரவா. இதனைக் கருத்திற் கொண்டு, பல்கலைக்கழகமும் எதிர்காலத்தில் தகுந்த திட்டங்களை மேற்கொள்ளுமென்றே தேவஸ்தானம் நம்புகிறது. விரைவில் புகழ்பெற்ற உலகப் பல்கலைக்கழகப் பட்டியலில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகமும் தனக்கென்ற ஓர் இடத்தினை பெறும் வகையில் அதன் தரமும் தன்மையும் உயர்ந்து, இந்திய பல்கலைக் கழகங்களுக்கு ஒரு முன்னோடியாகத் திகழ தன் வாழ்த்துக்களை இவ்வெள்ளி விழா சமயத்து தி. தி. தேவஸ்தானம் தெரிவித்துக் கொள்கின்றது.*

# திருமலையில் இறைவனைத்தரிசிக்க வரும் ஏழை எளிய யாத்திரிகர்களுக்கு 'இலவச உணவு' வழங்க உங்களுக்கு விருப்பமுள்ளதா?

*இநதுசமய இலககியங்கள், பல புராணக் கதைகளின் மூலம் ஏழை எளியோர்ககு வழஙகப்படும் அன்னதான மகிமையைப்பற்றி விளககிக் கூறுகினறன. அதுவும குறிப்பாகத திருமலை போன்ற திருத்தலத்தில் இறைவனைத் தரிசிக்கவரும் ஏழை யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கப்படுவது சாலச்சிறந்ததாகும். அது போலவே இறைவனின பிரஸா தங்களை இலவசமாக வழங்கபபடுதலும் மிக உனனதமாகக கருதப்படுகிறது.*

*இவ்வகையில திருமலை திருப்பதி தேவஸ்தானததாரால புகுத்தப்பட்ட "ஸ்ரீவேஙக டேஸவரா நித்ய பிரஸாத தான அறக்கொடை" திட்டத்தின் கீழ் நீங்கள், திருமலையில், இறைவனைத தரிசிக்கவரும ஏழை யாத்திரிகாகளுக்கு இறைவனின் பிரஸாதங்களான உணவுப் பொட்டலஙகள் அல்லது லட்டுகள் அல்லது வடைகள் ஆகியவறறை இலவசமாக வழஙகலாம்.*

*திருமலை திருப்பதி தேவஸ்தானத்திறகு ரூ. 500/-ஐ முதலில் அறககொடையாக வழஙகுதல் வேண்டும். இததொகையினுல வரும வட்டித் தொகையினைக கொணடு 20 ஏழை யாத்திரிகர்களுக்கு இலவசமாக பிரஸாதங்கள அலலது 'கயூ' வரிசைகளில் வரும் யாத்திரிகர்களுக்கு 20 லட்டுகள் அலலது 15 வடைகள வழஙகபபடும. இவ இலவச பிரஸாத வழங்கீடு, வருடத்தில் ஒருநாளின் போது—அது உங்கள பிறநத நாளாகவோ—திருமண நாளாகவோ—உங்கள் பிள்ளை அல்லது மகளுடைய பிறநத நாளாகவோ—உங்கள்தாய அல்லது தந்தையாரது நினைவு நாளாகவோ—அலலது உங்களுக்கு ஏதேனும ஒரு வகையில பிடித்த மான நாளாகவோ (இருக்கலாம்)—நடைபெறும.*

*ஒருநபர் எத்தனை அறககொடைகளாவது வழஙகலாம. ஒவவொரு அறக் கொடைக்கான இலவச பிரஸாத வழங்கீடு, நீங்கள் விருமபும வெவவேறு நாளின்போது நடைபெறும. குறைந்தபட்சம 20 அறக்கொடைகள் வழங்கினுல், அறககொடை வழஙகிய நபரைச்சார்ந்த 5 நபாகளுககு, இலவச பிரஸாத வழங்கீட்டு நாளின்போது, இறைவனின் இலவச தரிசன வசதி வழங்கப்படும் (இது 5 சிறப்பு தரிசன டிககககட்டுகளின மதிப்பான ரூ. 125-க்குச் சமமாகும்).*

*17–3–80 அன்று, அதாவது தெலுஙகு வருடப்பிறபபு நாளனறு செயற்படுத்தப்பட விருக்கும இததிட்டத்திறகான அறக்கொடைகள இப்போது முதல் ஏற்றுக் கொள்ளபபடுகின்றன.*

*நீங்கள் அளிக்கும் இவ அறககொடை தொகைகளுக்கு வருமானவரி விலக்கு உணடு. நீங்கள உங்களுடைய வருமானவரி கணக்கின் போது, இவ் அறக் கொடையினைச சுட்டிக் காட்டி வரிவிலக்கு பெறலாம்.*

*அறக் கொடையாளர்கள, தொகையினை இநதியாவில உளள ஆந்திரா பேஙக கிளை அலுவலகங்களின மூலமாகவோ அல்லது தி. தி. தேவஸ்தானம திருப்பதி எனும் முகவரியில 'எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர்' எனும் பெயரில் 'டிமாண்ட் டிராப்ஃட்' ஒனறினை எநத வங்கி மூல மாவது வாங்கி "மேனேஜர் ஆநதிரா பேங்க், காந்திரோடு, திருப்பதி, 517501" எனும் முகவரிக்கு கீழ்க்காணும் விவரங்களுடன் அனுப்புதல வேண்டும.*

*பெயர், கோத்திரம் / குடும்பத்தின் பெயா மறறும கிருஹஸதரின் / அறக்கொடை யாளரின் முழு முகவரி·*

*இலவசமாக வழங்கப்பட வேணடிய பிரஸாத வகை விவரம. (உணவுப் பொட்டலங் கள்/லட்டு/வடை)*

*இலவசமாக வழஙகப்படவேண்டிய நாள்.*

**செயலாட்சித் தலைவர்,**

***திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.***

# மகிஷாசுரமர்த்தினி

திரு. அ. நடராஜன் - திருப்பதி.

முன்னொரு காலத்தில் தேவர்களுககும் அவுணர்களுக்குமிடையே நூறு ஆண்டுகள் கடும் போர் நிகழ்ந்தது. தேவர்கள் இந்திரன் தலைமையிலும், அரக்கர்கள் மகிஷாசுரனின் தலைமையிலும் போரிட்டனர். மிகுந்த பராக்ரமத்துடன் கூடிய அசுரர்களின்முன் தேவர்களின் படை சிதறி ஓடியது. தேவர்களை வென்றபின் மகிஷாசுரன் இந்திரனின் பதவியை வலிந்து பற்றிக் கொண்டான்.

தோற்றுப்போன தேவர்கள் மும்மூர்த்திகளிடம் சென்று, தங்களுக்கு ஏற்பட்ட அவல நிலையை எடுத்துக் கூறினர். துராத்மாவான மகிஷாசுரனின் ஆட்சியில் தேவர்கள் எங்ஙனம் வெறும் மனிதர்களைப் போல் அஞ்சி வாழ வேண்டியிருந்தது என்பதை விவரித்து, அவர்களைச் சரணடைந்தனர். தேவர்களின் துயரநிலை கண்டு சிவனும் விஷ்ணுவும் பெரிதும் சினமடைந்தனர். அவர்கள் முகங்கள் கோபத்தினால் பயங்கரமாகத் தோன்றின. அவர்களுடைய முகங்களிலிருந்தும் இந்திரன் முதலான தேவர்களின் உடல்களிலிருந்தும் வெப்பத்துடன் கூடிய ஒளிப்பிழம்புகள் வெளிப்பட்டன.

இவ்வாறு வெளிப்பட்ட சோதிப் பிழம்புகள் அனைத்தும் திரண்டு ஒன்றுகி, ஒரு பெண்ணுருக் கொண்டது. சிவனின் ஒளி அப்பெண்ணின் முகமாகவும், விஷ்ணுவின் பொலிவு அவள் கைகளாகவும், பிரம்மாவின் தேசு அவள் பாதங்களாகவும், வெவ்வேறு தேவதைகளிடமிருந்து வெளிப்பட்ட அனற்பிழம்புகள் உடலின் பிற உறுப்புகளாகவும் மாறி, நல்லுருவுடன் கூடிய தேவியாக வடிவெடுத்தன. சிவன் சூலத்தையும், விஷ்ணு சக்கரத்தையும், வருணன் பாசத்தையும் அவளுக்கு வழங்கினர். பிரமன் மணிமாலையும் கமண்டலமும் கொடுத்தார். இமவான் சிங்கத்தை வாகனமாகத் தந்து உதவினன். இவ்வாறுக, எல்லாத் தேவதைகளும் தத்தம் சக்திகள் அனைத்தையும பல்வேறு ஆயுதங்களின் உருவில் வழங்கினர். இப்போர்க்கருவிகளை ஏந்திய தேவி உரத்துச் சிரித்தவுடன் நாற்றிசையிலும் பெரும் அச்சம் ஏற்பட்டது.

சிங்கவாகனத்தின் மீது அமர்ந்து, தேவி மகிஷாசுரனைக் கொல்வதற்காகப் புறப்பட்டவுடன், தேவர்கள் அனைவரும் வெற்றி முழக்கமிட்டனர். மூவுலகையும் கிடுகிடுக்குமாறு செய்துவநத அசுரனின் படைக்கும் தேவிக்கும் போர் மூண்டது. மகிஷனின் அணியில் அவனுடைய சேனுபதியாகிய சிக்ஷுரன் நால்வகைப் படையுடன் போர்க்களம் வந்தான். உதத்ரன், மஹாஹனன், அஸிலோமன், பாஷ்கலன், பிடாலன் முதலிய அவுணர்வீரர்கள் போரிட்டனர். தேவியைக் கொல்லும் பொருட்டு அவர்கள் வாளினுல் அவளைத் தாக்கினர். ஆனுல், சண்டிகையோ அவர்களுடைய அஸ்திர சஸ்திரங்கள் அனைத்தையுமே அழித்தெறிந்தாள். தேவியின் வாகனமாகிய சிங்கம் பிடரி மயிரைச் சிலிர்த்துக்கொணடு ஊழிக்காலத் தீயைப் போல அரக்கர் படையை நாசம் செய்தது. தேவி சூலத்துடனும் கதையுடனும் ராட்சஸர்களை வதம் செய்தாள். போர்க்களம் எங்கிலும் துண்டிக்கப்பட்ட உடல்களும் வெட்டப்பட்ட தலைகளும் அறுந்து வீழ்ந்த கைகளும் பயங்கரமாகக் காட்சியளித்தன. மகிஷனின் சேனைத் தலைவனுன சிக்ஷுரன் சீற்றத்துடன் அம்பிகையோடு பொருத வந்தான். மேரு மலையின்மீது மழை பொழிவதைப் போல, தேவி அவன்மீது சரமாரி விடுத்து, தேர்ப்பாகனைக் கொனறு, அவனுடைய உடலெங்கிலும் அம்புகளைப் பாய்ச்சி, அவனை வதம் செய்தான். அரக்கர் படை தீயினிற்பட்ட பஞ்சைப் போல் அழிவுற்றது.

பிறகு, மகிஷாசுரனே தன் வலிமையான குளம்புகளைத் தரையின்மீது உதைத்தும், கொம்புகளினுல் மலைகளையே தூக்கி எறிந்தும், பயங்கரமாகப் பிளிறுக் கொண்டு தேவியை எதிர்த்தான். தேவி தன்மீது பாய்ந்து வந்த அரக்கனைப் பாசக் கயிற்றினுல் பிணித்துக் கட்டியவுடன் அவன் சிங்க உருக்கொண்டான். அம்பிகையோ அதன் தலையைத் துண்டித்தவுடன், அவன் கத்தியுடன் கூடிய மனித உருவை எடுத்தான். அப்போதே அவனை அம்பிகை வெட்டி எறிந்தாள். பின்னர், அவன் மாபெரும் யானை உருவத்துடன் எதிர்த்தான். சணடிகை அதன் தும்பிக்கையைத் துணித்து வீழ்த்தினுள். பிறகு, அக்கொடிய அரக்கன் மீண்டும் தனது எருமை உருவுடன் வெளிப்பட்டுப் பாய்ந்து வந்தான். சினமடைந்ததேவி "மூடனே! இன்னும் ஒரே கணத்தில் உனது வாழ்வு முடியப் போகிறது.'' எனப் பேரொலி எழுப்பி, அரக்கனைக் கீழே தள்ளி, அவன் கழுத்தைக் காலினுல் மிதித்து, சூலாயுதத்தினுல் அவனைக் குத்தினுள். தேவியின் பாதங்களின் கீழ் அகப்பட்டுக் கொண்ட அவன் எருமை முகத்தோடுகூடத் தன் உண்மையான உருவத்தின் பாதிப் பகுதியுடன் வெளிப்பட்டான். இங்ஙனம் போராடிய அசுரனின் தலையைக் கொய்தாள் தேவி. தேவர்கள் அனைவரும் பெரு மகிழ்ச்சி பெற்று, உலக நாயகியான அன்னையை உவப்புடன் ஏற்றித் தொழுதனா.

அமரர் அனைவராலும் வணங்கப் பெறும் அகிலாண்ட நாயகி தீயதை ஒழித்து, இறையடியார்களுக்கு வீட்டுப் பேரின்பத்தையே வழங்கும் உலக அன்னையாவாள். அவள் சரிதம் அற்புதமான தாகும்; அதைப் படித்தால் நமது வாழ்வு பாவன மாகும்.



# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

1-3-79 முதற்கொண்டு திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் நிகழ்ச்சி நிரல்கள் கீழ்வருமாறு மாற்றஞ் செய்யப்பட்டுள்ளன.

சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய்க் கிழமைகளில்;

காலை

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை. அதாவது ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வ தரிசனம்

மதியம் 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) இரண்டாவது மணி.

மாலை

1-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்

இரவு 8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)

9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி.)

புதன் கிழமைகளில் (ஸஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை (தனி.)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை, (சகஸ்ர நாம அர்ச்சனை) (தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்து முறை, சேவைக்கான ஏற்பாடுகளை மேற்கொளல் முதலியன.

6-00 முதல் 8-00 வரை ; ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) மணி.

8-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்

இரவு 8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)

9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30க்கு: ஏகாந்த சேவை. (தனி.)

வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம்

3-30 முதல் 3-45 வரை: சுத்தி

3-45 முதல் 4-30 வரை: தோமாலா சேவை (தனி.)

4-30 முதல் 4-45 வரை: பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை: முதல் அர்ச்சனை; சகஸ்ர நாம அர்ச்சனை (தனி)

5-30 முதல் 6-00 வரை: முதல் மணி, பலி, சாத்து முறை.

6-00 முதல் 8-00 வரை: சாலிம்பு, 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.

8-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்

இரவு 8-00 முதல் இரவு 10-00 வரை: பெரிய சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவு மணி ஏகாந்தம்.

இரவு 10-00 முதல் நள்ளிரவு 12-00 வரை: பூலங்கி சேவை.

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30 க்கு: ஏகாந்த சேவை (தனி)

வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம்.

3-30 முதல் 5-00 வரை: சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 7-00 வரை: அபிஷேகம்.

7-00 முதல் 8-30 வரை: ஸமர்ப்பணை முதலியன.

8-30 முதல் 9-30 வரை: தோமாலா சேவை, அர்ச்சனை (தனி.)

9-30 முதல் 10-00 வரை: 2வது மணி, பலி, சாத்து முறை.

10-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்

இரவு 8-00 முதல் இரவு 9-00 வரை: சுத்தி, இரவு கைங்கர்யங்கள்.

இரவு 9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை; சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி)

குறிப்பு : சுப்ரபாதத்திற்கு ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப் படுவர். அர்ச்சனை, தோமாலா சேவை, அபிஷேகம் ஆகியவற்றிற்கு ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் அனுமதிக்கப்படமாட்டாது. ரூ. 4/-க்கு விற்கப்படும் சேவானந்தர டிக்கெட்டு வசதிகள் தற்போது நிறுத்தப்பட்டுள்ளன;

# கங்கா ஸ்நானம்

*கங்கேச யமுனைச் சைவ கோதாவரீ*
*சரஸ்வதி*
*நர்மதே ஸிந்து காவேரி ஜலேஸ்மின்*
*சந்நிதிம் குரு.*

குழந்தைகளுக்கு குதூகலம்! குடும்பத் தலைவனுக்குக் கவலை. இளம் தம்பதிகளுக்கு உறசாகம், பொடிப் பயல்களுக்கு பட்டாசு வெடிப்பதில் குஷி. இவ்வளவையும் ஏற்படுத்தும் தீபாவளிப் பண்டிகை பாரத தேச மெங்கும் கொண்டாடப்படுவதாகும். இப்பண்டிகை மிகப் பழங்காலப் பண்டிகை. ஹிந்துக்கள் மட்டுமின்றி புத்தஜைன மதத்தினரும்கூட கொண்டாடுகிறார்கள். நமது ஆச்சாரிய சுவாமிகள் இப்பண்டிகையை 'பகவத் கீதையின் தம்பி' என்கிறார். ஞான நூல்களில் எப்படி பகவத் கீதை எல்லாவற்றையும் விட தனிக் கியாதி அடைந்திருக்கிறதோ அதே மாதிரி தீபாவளி எல்லாப் பண்டிகைகளைக் காட்டிலும் அதிக கியாதி அடைந்திருக்கிறது.

நரகாசுரன் பரமாத்மாவினால் சம்ஹாரம் செய்யப்பட்டு விட்டதைக் கண்ட அவன் தாய்க்கு துக்கம் மேலிட்டது. 'என் பிள்ளை போன துக்கம் எனக்கு இருந்தாலும் உலகிலுள்ளவர்களுக்கு எவ்வித துக்கமும் இருக்கக் கூடாது' என்றும், 'அன்று எல்லாரும் மங்கள ஸ்நானம் செய்து புத்தாடை உடுத்தி, விருந்துண்டு சந்தோஷமாக இருக்கவேணடும்' என்று வேண்டிக்கொண்டதாக ஒரு கதை உணடு. இத்தகைய தியாக உணர்ச்சி காட்டப்பட்டது காரணமாகவே இப்பண்டிகைக்கு தனிக் கியாதி ஏற்பட்டது என்று கூட சொல்லலாம். ''நாம் துன்பப்பட்டாலும் உலகம் க்ஷேமமாக இருக்க வேண்டும்'' என்ற மனப்பான்மையை வளர்த்துக்கொள்வது தான் இந்த தீபாவளியைக் கொண்டாடுவதின் பயன்'' என்று காமகோடி ஆச்சாரிய சுவாமிகள் சொல்லியிருக்கிறார்.

சந்திரகுப்த விக்ரமாதித்தன தர்மததை நிலை நிறுத்தும் பொருட்டு ஐப்பசி மாதம் அமாவாசையன்று ரத்தின சிம்மாசனம் ஏறியதாக சரித்திர ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். அன்று முதல்தான் விக்கிரம சகாப்தம் ஆரம்பமான தாகக் கூறப்படுகிறது. இதனால் தானோ என்னமோ வடநாட்டில் தீபாவளியை புதுவருஷப் பிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். இந்த புண்ணிய தினத்தில்தான் ஸ்ரீ ராமர் அயோத்திக்குத் திரும்பி வந்து பட்டாபிஷேகம் செய்து கொண்டார் என்று சொல்லப்படுகிறது.

நரக சதுர்த்தியன்று லக்ஷ்மி கங்கை நீரிலும், எண்ணெயிலும் இருப்பதாகச் சொல்கிறார்கள். கங்கை இல்லாத ஊர்களில் எந்த இடத்தில் அன்றைக்கு எண்ணெய் தேய்த்துக்கொண்டு வெந்நீரில் ஸ்நானம் செய்தாலும் கங்கா ஸ்நானம் செய்த புண்ணியம் வருகிறது என்று துலா மகாத்மியப் புராணம் சொல்கிறது. எல்லா ஆசிரமக்காரர்களும் வைராக்கிய சீலர்களும் கூட தீபாவளியன்று ஸ்நானம் செய்ய வேண்டும் என்று அப்புராணத்தில் சொல்லப்படுகிறது.

மகாராஷ்டிரத்தில் அன்று பரம ஏழையும் எண்ணெய் தேய்த்துக் குளித்துப்புதுத்துணி உடுத்துவானாம். அவர்கள் தீபாவளிப் பண்டிகையை தாம்பூலம் போடும் திருநாள் என்றழைக்கிறார்கள். வங்காளத்தில் பவானியை உத்தேசித்து இப்பண்டிகையைக் கொண்டாடுகிறார்கள்.

தீப ஆவலி என்பதற்கு தீப வரிசை என்று அர்த்தம். ஐஸ்வரிய தேவதையான லக்ஷ்மியை வழிபடும் பண்டிகை இது. தீபாவளி முக்கியமாக சூரியனுடைய போக்கில் உண்டாகும் மாறுதலைக் காட்டுகிறது. சூரியன் அன்று துலா ராசியில் நுழைகிறார்.

''அயின் இ அக்பரி'' என்ற நூலிலிருந்து மொகலாய சக்கரவர்த்தி அக்பர் தீபாவளி கொண்டாட்டத்தில் கலநது கொண்டதாகத் தெரிகிறது. தீபாவளியில் பட்டாசு வெடிக்கும் வழக்கத்தை ஏற்படுத்தியவர் முதல் மொகலாய சக்ரவர்த்தியான பாபர் தானாம். அக்காலத்து ஹிந்து அரசர்கள் தியாக மூர்த்தியாகிய மகாபலியை வாழ்த்தி தீபாவளி கொண்டாடுவது வழக்கமாம்.

நரகாசுரனுடன் நடைபெற்ற யுத்தத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா தேர்த்தட்டில் சோர்ந்து விழுந்த போது சத்யபாமை வீரத்துடன் வில் லேந்தி நரகாசுரனை வதைத்ததால் இப்பண்டிகையை வீரலக்ஷ்மியை வழிபடும் திருநாளாகக் கொண்டாடப் படுகிறது. இந்த நரகாசுரவதம் நடைபெற்ற இடம் (காமரூபம்) அஸ்ஸாம் ராஜ்யத்தில் இருக்கிறது.

**திரு. நஜன்-சென்னை.**

இவ்விழா மிகத் தொன்மையானது என்பது தொல்காப்பியத்தில் கூறப்பட்டிருப்பதிலிருந்து தெரிகிறது.

தமிழர்கள் வாழத் தெரிந்தவர்கள். உணவும் உடையும் வாழ்க்கைக்கு அத்தியாவசியம் என்பதை உணர்ந்தவர்கள். அதனால் தான் உணவுக்காக (பொங்கல்) ஒரு பண்டிகையையும், உடைக்காக இப்பண்டிகையையும கொண்டாடி வருகின்றனர். முன்காலத்தில் பெண்கள் சமைப்பது மட்டுமின்றி நூற்கவும் செய்து வந்தார்கள். இப்போதுதான் நூற்பது அடியோடு கைவிடப்பட்டு விட்டது. ஆடையும் அணியும் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் உணடு. ஆடைநெய்யும் தொழில் நினைப்பிற்கு எட்டாத நெடுங்கால மாக நடந்து வருகிறது.

'' இம்மையேதரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் களையலாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதறகு
யாதும் ஐயுறவில்லையே''

என்பது சுந்தரர் பாடிய தேவாரம். ஈசனை உள்ளன்போடு வழிபட்டால் இம்மையில் உண்ண உணவும், உடுக்க உடையும் கிடைக்கும். மறுமையில் சிவலோக வாழ்வும் சித்திக்கும் என்பது இப்பாட்டின் கருத்து. காறை, கலிங்கம், காழகம், அறுவை, துகில் முதலிய தமிழ்ச் சொற்கள் ஆடையையே குறிப்பதாகும். ஆடையைக் குறிக்கும் பல அருமையானச் சொற்கள் இப்போது பழகும் தமிழில் இல்லை. அவைகளில் ஒன்று அறுவை. ஆடை செய்யும் தொழிலாளர்களை அறுவையர் என்று 'மணிமேகலை' குறிப்பிடுகிறது. தறியிலிருந்து அறுக்கப்பட்டது அறுவை. துணிக்கப்பட்டது துண்டு. குறைக்கப்பட்டது கூறை. கைத்தறி நெசவுத்தொழில் வேதகாலம் முதற்கொண்டே ஒரு சிறந்த குடிசைத் தொழிலாக விளங்கி வந்துள்ளது. இத்தொழில் செழிப்படைய வேண்டியது அவசியம். ஒளித் திருநாளன்று கைத்தறி ஜவுளிகளை வாங்கி ஆதரித்தால் நெசவாளர் வீடுகளிலும் ஒளி வீச வழி ஏற்படும்.

பட்டாசு இல்லாத தீபாவளி பருப்பில்லாமல் கலியாணம செய்வது போலத்தான. தீபாவளிக்குப் பட்டாசு எதற்காகச் சுடவேண்டும்? நரகாசுரனும் அம்மாதிரி வரம் எதுவும் கேட்டதாகத் தெரியவில்லை. எல்லாப் பண்டிகைகளையும்விட தீபாவளிதான் எல்லாருக்கும் மகிழ்ச்சி அளிக்கும் பண்டிகை. பெரியவர்கள் ஸ்நானத்தின் மூலம் புண்யம் பெறுவதில் நாட்டமாக இருப்பார்கள். மணமான புது தம்பதிகள் ஒருவரை ஒருவர் சந்தித்து மகிழ்வதில் இருப்பார்கள். சிறுவர் சிறுமியர் புதுச் சட்டை, புதுப்பாவாடை, பட்சணம் இவைகளைக்கண்டு சந்தோஷமடைவர். இவ்வளவு பேர் சந்தோஷமாக இருக்கும்போது குழந்தைகள் பங்கு மட்டும் சொத்தையாகப் போவானேன்? அவர்கள் குஷியாக இருக்கவேதான் பட்டாசுகளும் மத்தாப்புகளும். 'காசைக் கரியாக ஆக்காதீர்கள்' என்றால் பட்டாசுகளே வாங்கவேண்டாம் என்று அர்த்தமில்லை. அளவுக்கு மீறி வாங்கி அட்டகாசம் செய்ய வேண்டாம் என்றுதான் அர்த்தம்.

இந்த வாண வெடி விஷயங்களில் சீனர்களுக்கு முன்பு இந்தியர்கள் மிக அனுபவம் பெற்றவர்களாக இருந்தனர் என்பது தெரிகிறது. இந்த வாண வெடிகள் விஷயமாக ஆராய்ச்சி செய்துள்ள ஸ்ரீ பி. கே. கோடே என்பவர் வாண வெடிகள் செய்வது குறித்து ஒரே ஒரு சமஸ்கிருத சுவடி இருப்பதைத் தான் கண்டுபிடித்திருப்பதாகவும் ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த கஜபதி பிரதாப ருத்ர தேவர் (1497–1539) என்பவர் 'காதுகா சிந்தாமணி' என்ற நூலில் இதைப்பற்றி எழுதியிருக்கிறார் என்றும் தான் எழுதியுள்ள புத்தகம் ஒன்றில் குறிப்பிட்டிருக்கிறார். ''ஆகாச பைரவ கல்பம்'' என்கிற சுவடி ஒன்றில் இதுபற்றி இருக்கிறதென்றும, இது தஞ்சை சரஸ்வதி மகால் நூலகத்தில் உள்ளதாகவும அவா குறிப்பிட்டிருக்கிறார். கங்கா ஸ்நான பலனால் சரீர சுத்தி, மன சுத்தி, ஆத்ம சுத்தி இவை ஏற்படுகின்றன. ஆத்மாவைப் பற்றியுள்ள அழுக்குகளான பயம், அதைரியம், இவை அகல வெடி தீர்ப்பதும் ஒரு வெளி உபாயமாக இருக்கட்டுமே!

## வாண வெடித் தத்துவம்

பிரமாதமாக சப்தம் போட்டுக் கொண்டு பிரகாசத்தை வீசிய வெடிகளும் வாணங்களும் மறு கணத்தில் சுட்ட கரியாக குவிகின்றன. பத்திரமாக போற்றி வைக்கும் வாணங்களும் வெடிகளும் வெடித்த பின் குப்பை என்று ஒதுக்கப்படுகின்றன.

இவைகள் பல ரகங்கள் இருந்தாலும் இவைகளுக்குள் இருப்பது ஒரே வித மருந்துதான். திரி மூலம் கொளுத்தப்படாதவரை ஜடம்போல் இருக்கிறது. இதனுள் ஒளி சக்தியும் ஒலி சக்தியும் அடங்கியிருக்கின்றன என்பது கொளுத்தியபின் தான் தெரிய வருகிறது.

தபஸ்ஸினாலும் தியானத்தினாலும் ஆத்ம சைதன்யத்தின் பிரகாசத்தை நாம் அறிய முடியும் என்று சொல்லப்படுகிறது. பட்டாஸில் வைக்கப்படும் நெருப்பு ஜடப்பொருளை சாம்பலாக்கிக்கொண்டு பிரகாசிக்கிறது. முற்றிலும் சாம்பலாக்கா விட்டால் தூக்கி எறியப்படுகிறது. பிரும்மஞானி தன் சரீரத்தை ஒரு பொருட்டாக நினைப்பதில்லை. அதை ஞானக்கனிக்கு இரையாக்கி விடுகிறான். வாணங்களும் வெடிகளும் தனித்தனி பெயர்கள் உள்ள ஜீவன் போல இவை தீபாவளியின் போது ஞானியான ஜீவன் பிரம்மதத்துவத்தைக் காண்பது போல நெருப்புதத்துவத்தை முடிவாகக் காண்கின்றன. ஞானக்கனல் ஏற்பட்டால் பட்டாசு வெடிப்பதுபோல நம் அக்ஞானம் அழிந்து ஒழியும்.

★

நர்த்தன விநாயகர்,
திரு. டி. எஸ். ராஜன்-பொள்ளாச்சி.



# கும்பகோணம் மஹாமகத்தின் சிறப்பு

பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு முறை இத்திருவிழா வெகு சிறப்பாக கொண்டாடப்பட்டு வருகிறது. இது சென்ற 14-2-68 அன்று நடைபெற்றது. மறுபடியும் வருகிற 1-3-1980 சனிக்கிழமை அன்று நடைபெறும்.

''குடமூக்கே குடமூக்கே என பீராகில
கொடுவினைகள் தீர்ந்து அரனைக்
குறுகலாமே''

இது அப்பரின் அமுதவாக்கு. மூர்த்தி தலம், தீர்த்தம் ஆகிய சிறப்புகள பொருந்தியது கும்பகோணம். திருநாவுக்கரசர், திருஞான சமபந்தர், அருணகிரி நாதர், மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஆகியயோரால் பாடப்பட்ட சிறப்புடையது. வடபால் காவிரியும், தென்பால் அரசலாறும் மாலைபோல் அமைந்து உள்ளது. காஞ்சி காமகோடி பீடத்தின் தலைமை நிலையம் இங்குள்ளது. கடவுள் வழிபாட்டிற்கு உகந்த மாமாங்கத் திருக்குளமும் இங்கு அமைந்திருப்பது தனிச்சிறப்பு.

நினைப்பிற்கு எட்டாத நெடுங்கால மாகக் கோடிககணக்கான மக்கள் இங்குக் கூடுவர். மகாமகத் தீர்த்ததில் ஆடுவர். ஈசன் புகழ்பாடுவர். இம்மை மறுமைக்குரிய பேரின்பம் தேடுவர். உமை ஒரு பாகங்கொண்ட உத்தமனைப் போற்றி, நெடுந்தூரத்தே அமர்நது இக்குளத்தை நெஞ்சார எண்ணினாலும் இமை நொடியளவில் பாவம் அழிந்து, புணணியம் பெருகும் என்பர்.

மாசி மாதம் மக நட்சத்திரம சிறப புடையது. அதிலும் குரு சிம்மராசியிலும், சநதிரன் சிம்மராசியிலும் வரும மாசி மகமாகிய பௌர்ணமி நாள் மிக மிகச் சிறப்புடையது. இவ்வாறு பன்னிரணடு வருஷத்திற்கு ஒரு முறை அமையும்.

கங்கை, யமுனை, சரஸ்வதி, சரயு, கோதாவரி, நருமதை, சிந்து, காவிரி, வேகவதி என்னும் ஒன்பது ஆறுகளிலும் மக்கள் தங்கள் பாவம் நீங்கக் குளிப்பதால் உண்டாகும் பாவங்களையெல்லாம் போக்கிக் கொள்ள ஒன்பது நதிக் கன்னியரும், பன்னிரணடு ஆணடுகளுக்கொரு முறை வரும் மஹாமக நாளில் திருக்குளத்தில் வந்து நீராடுவதாக நமபபபடுகிறது. திருக்குளத்தில் கங்கை முதலிய ஒன்பது ஆறுகளும் வந்து கூடுவதாகக் கொள்கை.

அமுதவாவி, அமுத தீர்த்தம், கன்னியர் தீரத்தம், பாவநாசத் தீர்த்தம், மாமாங்கக்குளம் எனப்பல வாறு இக்குளம் அழைக்கப்படுகிறது. விழா நாளில் குளத்தில் முழுகுவோர்க்குப பெரும் புண்ணியம கிடைக்கும். இராமபிரானும் இதில நீராடி நற்பேறு பெற்றார் எனில் இதன் பெருமையைச் சொல்லவும் இயலுமோ! இதன் நடுவில் உள்ள ஒன்பது கிணறுகளில்தான, நவகன்னியர் மஹாமகத்தன்று எழுகிறார்கள். இக்குளத்தைச் சுறறிலும் பதினாறு மணடபங்கள் அமைந்துள்ளன.

**திரு. ஏ. என். சுப்ரமண்யம்,**
**அக்ரஹாரம்.**

ஒரு சமயம் பிரமன் சிவபெருமானிடம சென்று, உலகம் அழியும் ஊழிக்காலம் வரப்போவதால் தன படைப்புத் தொழிலுக்கு உதவுமாறு வேண்டினான். அமுதத்தையும் மணணையும் சேர்த்துப் பிசைந்து, மாயமாகிய குடத்தைச் செய்து, அதனுள் அமுதத்தை நிரப்பி அவர்தரும் எல்லாப் பொருள்களையும் உணடாக்க வல்ல உயிர்ப் படைப்பு விதையை (சிருஷ்டி பீஜத்தை) வைத்துக் குடத்தின்மேல் மங்கலப் பொருளாம் மாவிலை, வில்வம், தேஙகாய், பூணூல் முதலிய வற்றை அமைத்து மேருமலையில் வைத்திருக்க அருளினார். பிரளய காலத்தில பெருங்காற்று, பெரு மழை, பெரு வெள்ளம், பெருக் கெடுத்ததால் அமுதககுடம வெள்ளத்தில் மிதந்து வந்து தென்திசையில் தங்கியது. குடத்தில் கட்டியிருந்த மங்கலப் பொருட்கள் சிதறுண்டு பறபல இடங்களில் விழுநதன. அவை லிங்க வடிவமாயின. மாவிலை வனனி மரமாயிற்று.

பிரமனது வேணடுகோளினபடி, சிவபெருமான் வேட வடிவத்தில் வநது அமுதக்குடத்தின்மீது அம பெய்தார். குடத்தின் மூக்கு வழியே அமுதத்தைப் பரவச் செய்தார். அதனால் இவ்வூர் குடமூக்கு எனத் தமிழிலும் கும்பகோணம் என வடமொழியிலும் பெயர் பெற்றது. அமுத கும்பத்திலிருந்து வழிந்தோடிய அமுதத்தின் ஒரு பகுதி வந்து தங்கிய இடமே மஹா மகத் தீர்தம். அதனால்தான் அங்குப் பெருகும் தீர்த்தம் அத்துணை பெருமை! இறைவன் அமுதத்தால் நனைந்த வெண் மணலையும் உடைந்த குடத்து ஒடுகளையும் சேர்தது லிங்க வடிவாக்கித் தாமும் அதனுள் புகுந்து அமர்ந்தார். கும்பத்திலிருந்து தோன்றிய பெருமான் ஆதலால் கும்பேசர் என்னும் திருப்பெயா பெறறாா.

குடந்தையின் நடுநாயகமாகக் கும்பேஸவரா கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கோயிலுக்கு முன்னே தூப லிங்கமாகிய ஒன்பது நிலைகளையுடைய கோபுரம் 128 அடி உயர்ந்து விளங்குகிறது. ஆதி கும்பேஸ்வரர், அமுத கும்பேசர், அமுதேசர் என இறைவன் அழைக்கப்படுகிறார். திருஞான சம்

பந்தர் குழகன் எனக் குறிப்பிடுகிருர். மங்கள நாயகி, மநதிர பீடசுவரி, மந்திர பீடநலநதள் எனனும் பெயர் கள் இறைவிக்கு உண்டு வேடனுக வந்த சிவபெருமான் கிராதமூர்த்தி என்னும் பெயருடன் சிலேயாக நிற்கிருர்.

கும்பேஸ்வரர் கோயிலுக்குத் தென் கிழக்கில் குடத்திலிருந்து வில்வம் விழுந்த இடத்தில் நாகேஸ்வரர் கோயில் உள்ளது.

இறைவனுக்கு வில்வனேசர், நாகேஸ்வரர், பாதாள லிங்கேசர் என்ற திருப்பெயர்கள் உணடு. இறைவி பெரிய நாயகி. இங்குள்ள இறைவனே இநதிரனும் சூரியனும் வழிபட்டதாகக் கூறுவது மரபு. சித்திரைமாதம் 10, 11, 12, தேதி களில் சூரியன ஒளி காலேஆறு மணிக் கெல்லாம் கருவறைக்குள் புகுநது மூல லிங்கத்தில் படிவதுண்டு.

அமுத கும்பத்தின் உறி விழுந்த இடத்தில் பொற்ருமரைக் குளத்தின கீழ்ப்புறம் சோமேசுவரர் கோயில உள்ளது. மஹாமகக் குளததின கீழ்க்கரையில தேஙகாய விழுந்த இடத்தில் அபிமுகேஸ்வரர் கோயில அமைந்துள்ளது. குளத்தின தென மேற்கு மூலேயில் பூஜையில் விழுந்த இடத்தில கௌதமேஸ்வரர் கோயில உள்ளது. குளத்தின் வடகரையில காசி விஸ்வநாதர் கோயில் உள்ளது. இராவணனே வெல்லும் பொருட்டு இராமபிரான இறைவனே வேண்டப பெருமான் இராமனின் உடம்பில் ஆரோகணித்ததால் இராவணவதம முட்டின்றி முடிந்ததாம. இறைவன காயாரோகணர் எனவும் இறைவி காசி விசாலாட்சி எனவும அழைக்கப படுகிருர்கள் இறைவன் வேடனுக நின்று அம்பு எய்த இடத்தில் பாணபுரீசுவரர் கோயில் உள்ளது.

மேலும் இங்குக கைலாச நாதா கோயில், கண்பட்ட விஸ்வநாதா கோயில், காளத்தீஸ்வரா கோயில், ஏகாம்பரேசுவரர் கோயில், விஸ்வ நாதா கோயில, பிரமன் கோயில, கரும்பாயிா விநாயகர் கோயில் முதலிய கோயில்கள உளளன சாரங்கபாணி கோயில, சகரபாணி கோயில, வராகப பெருமாள் கோயில இராமசாமி கோயில், உடையலூர் கோயில், திருமழிசை யாழவாா கோயிலமுதலிய வைணவக் கோயிலகள் பல உணடு.

இஙகுபபிரமனும் மூாத்திநாயனு ரும, மூாக்க நாயனுரும வழிபட்டு இருக்கிருாகள். மேலும் சணடி, சதன்மன், கிருதவீரியன, வீரவர்மன், சுலோசனே, ஞானவான், சுவாண ரோமன, மாநதாதா, இநதிரன, முதலியோா இறைவனே வணஙகி நலம் அடைநதனர். அமுதககுடத் தினே அமபெய்து அனேத்துயிர்க்கும் உயிரளிதத உததமனே, குடநதை வாழ்குழகனேத் தொணடராகித் தொழுதுபணிவோம்.



# வெள்ளீஸ்வரர்

எஸ். கண்ணன் - திருவிடைமருதூர்

எலலாம வல்ல எஙகும நிறைந்த பரமபொருளான சிவபெருமான் தன்னே வணங்கும மெய அன்பாகள் உயயும பொருட்டு திருககோயில கொண்டு எழுநதருளியுள்ள பல தலஙகளில திருமயிலேயில்உள்ள வெள்ளீச் சரமும ஒனறு. (சென்னேயில உள்ள மயிலாப்பூா எனபதுதான திருமயிலே) இத்தலதது பெருமானின பெயர் வெளளீஸவரர், அமமனின பெயர் காமாட்சி.

**இத்தலத்தைப் பற்றி நிலவுகின்ற வரலாறு :**

சிவாலயததில, அணேயும தருவாயில இருந்த விளக்கின திரியை ஒரு எலி தூண்டி விடடமையால, சிவபெருமானின அருளால அநத எலி மணணுலகத்தையும, விண்ணுலகத்தையும கட்டி ஆளககூடிய தகுதியை பெற்ற மாவலிச் சககரவர்ததியாகப் பிறநதது.

இந்த மாவலிச சககரவர்த்தி பெரிய வேளவி ஒன்றைச செயதாா. வேள்வியின் முடிவில ''யார் எதைக் கேட்டாலும் வழஙகுவேன'' என்று அறிவித்தாா. திருமால் வாமனன் வடிவம் கொணடு மாவலியை அடைந்து தமது திருவடிகளால் மூனறு அடிமண் வேண்டும என்ருா. மாவலியும மூனறு அடி மண்ணே வழஙகுவதாக வாக்களித்தாா. வநதவா யாசகர் அலலா அசுர குலததை அழிகக வநத திருமால எனறு அசுரகுல குருவான சுக்கராசசாரியார் அறிந்து கொண்டு வண்டுருவம கொண்டு மாவலி தாரை வார்தது தானம கொடுக்கும கெணடியின மூக்குவழியை அடைத் தாா. திருமால சுகராச்சாரியாரின சூழ்சசியை அறிநது தர்பபைப புலலினுல கெணடியின வழியை அடைத்துக் கொணடிருநத வண்டைக் குததினுா. தானம தடையினறி நடைபெறறது.

தர்பபைப புல்லினுல் குததபபட்டமையால் சுக்ராச்சாரியாரின் கண்கள் குருடாயின. இழந்த கண்ணே திருமபபெற சிவபெருமானே வேண்டினுர் கருணேக் கடலாகிய சிவபெருமான் சுக்கரனின பகதிக்கு மனம் இறங்கி இழந்த கண்களே மீணடும வழஙகினுர்.

வெள்ளி என்னும சுககரனுக்கு கண்களே வழங்கியதால சிவபெரு மான் வெளளீஸவரர் என்ற பெயரையும் பெற்ருர்.

சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# குரங்கு வாலி மனித வாலி தெய்வ வாலி

திரு. எஸ். வி. வைத்தியநாதன்,
சென்னை - 28

ஸ்ரீராமனின பதிலினை வாலி அப்படியே ஏற்றுக்கொண்டான. 'ராமா, என்ன அருமையான விளக்கம். ஆனால் நான் செய்த துரதிருஷ்டம, நான் சாகும் வேளையில் வநது எனக்கு இந்த ஞானத்தைக கொடுததாய் வாழும்போது கிடைததிருககலாம. அதனாலே, இப்போது உனனை ஒன்றே ஒன்று கேட்டுக் கொள்கிறேன். வாய்க்கு வநதபடி உனனைத் திட்டினேனே, அதற்காக என்னை மனனித்து விடு. நீ எனனைக் கொன்றிருப்பது எனககுக் கொடுத்த தண்டனை என்று ஏற்றுக் கொள்கிறேன். அது எப்படி என்றால் ஒரு அரசன் குடிமகனுக்குக் கொடுககும் தணடனைபோல் அல்ல; ஒரு ஆசிரியனமாணவனுககுக்கொடுககும் தணடனை போல அலல; ஒரு கணவன் மனைவிக்குக் கொடுக்கும தண்டனைப் போல அலல; பின், ஒரு தாய் தன் குழந்தைக்குக கொடுக்கும் தண்டனைபோல'' என்று.

மிகவும் முக்கியமான இடம் இது. ஒரு தாய குழந்தைக்குக் கொடுக்கும் தணடனை என்பது எப்படி? ஒரு தாய் தன் குழந்தையை மடியிலே போட்டுக் கொண்டு பாலாடையிலே விளககெணணெயை ஊற்றி, கையையும் காலையும பிடிததுக் கொணடு, வாயிலே ஊற்றுவாள. குழந்தை 'வீல்' எனறு அலறும். அபபாவுக்கு பொறுக்காது. 'போதும் நீ விளககெணணெய் ஊறறுவது. நிறுத்து. குழநதையைக் கொன்னுடாதே'' என்பார். அப்படி தாய தன் குழந்தைககு எணணெய் கொடுப்பது பிறருக்கு கொடுமையாகத் தோன்றினாலும், அவளுக்குத் தெரியும, இபபொழுது இப்படி கஷடப்பட்டால்தான குழந்தை பிற்காலத்தில் நன்றாக வளரும் என்று. அதுபோல 'ராமா, நீ எனககுக்கொடுத்திருக்கிற தணடனை, தாய் குழந்தைக்குக் கொடுப்பதுபோலே'! என்று கூறுகிறான்.

நாம் வேணுமானால், ராமன் வாலியைக் கொன்றது குற்றம் என்று சொல்லிக்கொணடிருககலாம் ஆனால், அது ராமனுக்குத தெரியும்; இது தாயின் செயல். ஒரு தாய் தன மகனுக்குச் செய்யவேண்டியதை வாலிக்கு நாம் செய்திருக்கிறோம்' எனறு.

மேலும், நாம்எலலோரும் உடம்பு வழ வழ — கொழு கொழு என்று இருக்கவேணடுமானால் நம் எல்லோருககும் தேவை வெணணை. அப்படி நாம் வெணணையைச் சாப்பிட்டு உடம்பு திடமாக இருக்கவேண்டுமென்றால் பால என்ற ஒன்று மோர் எனற ஒன்றைத தன் மேல் ஊறறிக் கொணடு 'குற்றப்படால்' ஒழிய நமக்கெல்லாம் வெணணை கிடைக்காது. பால் என்பது தன்னைக் குற்றப்படுத்திகொணடு பிறருக்கு வெணணையைக் கொடுப்பது போல், ராமபிரான் தனனைக் 'குற்றப்' படுத்திக் கொணடதுபோலேகாட்சியளித்து வாலி என்பவனுக்கு மோக்ஷமாகிற வெண்ணையைக் கொடுத்திருக்கிறார் என்பது யாருமே மறுக்கமுடியாத ஒன்று. வாலிககு மோக்ஷம் கொடுப்பதற்காக தெயவமாகிய திருமால் ராமனாக இறங்கி வந்து இப்படி விளையாடினார்.

இதுவரைக்கும் வாலி மோக்ஷம் பறறி விளக்கியாயிறறு. இனி அடுத்த கேள்வி, மறைந்து நின்று செயயலாமா? இது தனி கேள்வி; இதற்குத் தனி பதில். எல்லோருககும் சந்தேகம் வருகிற இடம் இது. நமக்கு மட்டுமெனன; வாலிக்கே வந்து விட்டது. ''ராமா! நீ எனனைக் கொன்றதெல்லாம் நியாயம் என்று விளங்கிவிட்டது ஆனால் ஏதோ புதருக்கு இடையில் மறைந்து நின்று கொண்டு மிருகத்தை வேட்டையாடுவது போல் மறைந்து நின்று கொன்றாயே! என்ன காரணம்?'' என்று கேட்டான். இதற்கு, இலக்குவன் இயம்பலுறுன் என்கிறார் கம்பர் வாலி கேட்டது ராமனிடம். பதில் சொல்வது லக்ஷமணன். ஏன்? பதில் சொல்ல முடியாது ராமனால். சொன்னால் தற்பெருமையாகி விடும். அதெப்படி?'

இங்குதான் சரணாகதி தத்துவம் விளக்கப்படுகிறது. லக்ஷமணன் சொன்ன பதிலைப் பார்பபோம்.

'வாலி! உனககு முன்பாகவே உன் தம்பிசுகரீவன ராமன திருவடிகளிலே சரணாகதி எனறு விழுந்து விட்டான். காலில விழுநதவனை அவன் எத்தகைய குறறம புரிந்தவனாக இருப்பினும அவனுக்கு அடைக்கலம் கொடுத்துக் காக்க வேண்டும் என்பது தான் சரணாகதியின் தததுவம். அப்படி சுக்ரீவன் வந்து விழுந்தவுடன் உனககு அடைக்கலம தந்தேன் என்று ராமன கூறிவிட்டான. அதனபடி சுக்ரீவனுக்கு அடைக்கலம் அளிக்க வேண்டுமானால் அவன் உயிரைக் காகக வேண்டும். அவன்




## ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

## ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

### தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஸ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

### ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸவர சுவாமி கோயில் | ஸ்ரீ சநதரமௌளீ-ஸவர சுவாமி கோயில |
|---|---|---|---|
| | | ரூ | ரூ |
| அர்ச்சனே | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | , | 0-50 | 0-50 |
| சகஸரநாம அர்சசனே | ,, | 5-50 | 5-00 |
| தோமாலநதார தரிசனம | | 5-00 | — |
| தேங்காய் வாததனு (உடைப்பது) டிகெட் ஒன்று | | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அமமை யார கோயில | ஸ்ரீ பார்வதி அம்மை யார கோயில |
|---|---|---|---|
| அர்சசனே | ,, | 1-00 | 1-00 |
| ஹாரததி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வாத்தனு (உடைபபது) டிக்கெட் ஒன்று | | 0-25 | 0-25 |

| நைவேததியங்கள | | ரூ |
|---|---|---|
| தத்யோதனம | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொஙகல | ,, | 60-00 |
| இனிபபுப் பொஙகல | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியததிற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொணடு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேணடும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில, இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள செயவிககலாம.

உயிரைக் காக்க வேணடுமானுல உன்னைக் கொல்ல வேணடும் ராமன உனக்கு எதிராக வந்தால் நீயும அவன காலில் சரணுகதி என்று விழுநது விடுவாய். அப்படி விழுநத உனக்கும் சரணுகதி கொடுக்க வேணடும். அப்படி உனக்கும சரணுகதி கொடுத்தால் சுக்ரீவனுக்குக கொடுத்த வாக்கு நிறைவேருமல போய்விடும். ஆகையால் மறைந்து நின்று கொன்ருர்'' என்ருன் லக்ஷ்மணன

மிகவும் நுணுக்கமாகத தெரிநது கொளள வேண்டிய இடம் இது.

முதலில் சுக்ரீவன் சரணுகதி யடைநது விட்டான். அவனுககு வாக்குறுதி கொடுத்தாயிற்று. என்ன வெனறு? வாலியை அடித்துத் தாரததையும அரசையும் கொடுப்பதாக. இப்போது வாலிககு நேரே வந்தால அவனும காலில் விழுவான். அவனுககும் சரணுகதி கொடுக்க வேணடிவரும். அவனும் சொல்வான், ராஜ்யமும தாரமும் எனக்கே யிருக கட்டும் என்று. அப்போது சுக்ரீவனுக்குக் கொடுதத வாக்கு என்னுவது?

இந்த இடததில் தான், சரணுகதி தத்துவம் எனருல் எனனவெனறு தெரிந்துக் கொளளவேணடும். இநது சமயத்திலே எந்த புராண இதிஹாஸஙகளே வேணடுமானுலும் பார்க்கலாம் தெய்வத்தை நோக்கி, சர்வ சங்க பரித்யாகமசெய்து உனனுடைய திருவடியே சரணம என்று சொலலி விட்டால அவன ஆயிரம் குற்றம் செயதவனுயிருநதாலும அவனுக்குச் சரணுகதி கொடுத்து அவனே ஏற்றுக் கொளள வேணடியது கடவுளின் கடமை. இஙகே ராமபிரானே சொலகிருா. பின்னுலே விபீஷணனே ஏற்றுக் கொள்வதா கூடாதா எனறு ஆலோசனேமணடபம்அமைக்க,யாரும் கூடாது என்று சொலல, கடைசியில் அனுமன ஏற்றுக் கொள்ளலாம்

(31-ம பக்கம பார்க்க)

# ஸ்ரீ பெரியாழ்வார் வைபவம்

ஸ்ரீயபதியான ஸர்வேச்வரன் அவாப்தஸமஸ்த காமனாய், அகில மங்கள குணங்களுடையவனாய் தெளி விசும்பு திருநாடு என்ற புகழ்பெற்ற பரமபதத்தில், திருமாமணி மண்டபத்தில் சீரிய சிங்காசனத்தில், ஸர்வாபரண பூஷிதராய், திவ்யாயுதங்கள் உடையவராய், ஸ்ரீ, பூமி, நீளா தேவிமார்களோடு அநந்த கருட விஷ்வக் ஸேனாதிகளுடனும், உபய விபூதி நிர்வாஹனாய் எழுந்தருளியிருக்கிறார்.

பூலோகத்திலுள்ள ஸம்ஸாரிகளும், நம்மையனுபவித்து மஹாஸம்பத்தைப் பெற்று பரம தயாளுவாய் மோக்ஷம்அடையவேண்டுமென்று திருவுள்ளங்கொண்டு, தச அவதாரங்கள் எடுத்து, பலவகை முயன்றும் முடியாமையைஅறிந்து, யானையைக்கொண்டு யானை பிடிப்பாரைப் போல, மனுஷ்ய ஜாதியிலே, ஆழ்வார்களை இடுவித்து ஜகத்தை திருத்த வேண்டுமென்று எண்ணினார்.

ஸ்ரீவத்ஸம், கௌஸ்தவம், வைஜயந்தி வனமாலை, ஸ்ரீ பூமி நீளைகளையும், ஸ்ரீ பஞ்சாயுதங்களையும், அனந்தகருடவிஷ்வக்ஸேனாதிகளையும் ''நீங்கள் போய் லீலா, விபூதியில நானுவர்ணங்களிலும் அவதரித்து அகிலோத்தரணம் பண்ணுங்கள்'' என்ற ஸர்வேச்வரன் நியமனப்படி ஆழ்வார்கள் பலரும் தமிழ் நாட்டிலே அவதரித்து திவ்ய பிரபந்தங்களை அருளினர்.

## பெரியாழ்வார் வைபவம் :

ஸ்ரீ வில்லிபுத்தூரிலே பிராம்மண குலத்தில் ஆனிமாதம் சுவாதி நட்சத்திரத்தில் விஷ்ணுசித்தர் என்ற திருநாமத்துடன கருடாம்சராய் அவதரித்திருந்தார். அவ்வூரிலே எழுந்தருளியுள்ள ஸ்ரீ வடபெருங்கோயிலுடையான் என்ற திருமாலுக்கு, உகந்து பணிசெயவது, நநதவனம் அமைத்து, புஷ்பங்கள் பயிரிட்டு, மாலைகட்டி அவனுக்குச சாற்றி அலஙகரித்து அவனை ஸேவிப்பதே கணபெற்ற பயன் என்று திருவுள்ளங் கொண்டு அழகிய நந்த வனம் அமைத்து தொணடு செய்துவந்தார். அக்காலத்தில் வல்லப தேவன் என்ற அரசன் மதுரையைத் தலைநகராகக் கொண்டு பாணடிய நாட்டை ஆண்டு வந்தான். அவர் ஒரு நாள் நகர்ச் சோதனைக்காக ஓர் இரவு வருங்காலத்தில் ஒரு திணணையில் ஒருவர் படுத்து இருந்தார். அரசன் அவரை எழுப்பி நீர் யார் எனக்கேட்க, ''நான் ஒரு வேதியன். கஙகையாடி வருகிறேன'' என்று பதில் கூறினார். அரசர் அவரை ஒரு அறிவுரை கூறும் எனக் கேட்க, அவ்வந்தணர் மழைக்காலத்துக்கு வேண்டியதை மற்ற எட்டு மாதங்களிலும், இரவுக்கு வேண்டியதைப் பகலிலும், முதுமைக்கு வேண்டியதை இளமையிலும், மருமைக்கு வேணடியதை இம்மையிலும் தேடிக்கொள்ள வேண்டும் என்னும கருத்துடைய சுலோகத்தை கூறினார்.

அரசன் அரண்மனைச்சென்று தனது புரோகிதர் செல்வநம்பி என்பவரை அழைத்து அவரிடம் அதைச்சொல்லி, இம்மையில் எனக்கு ஒரு குறையுமில்லை. மறுமைககாக நான செய்ய வேண்டியது யாது எனக் கேட்டார். செல்வநம்பி வித்வான்களைக் கூட்டி, மோக்ஷம் அளிக்கும கடவுள் யார் என அறிந்து அவரை வழிபடுவது தான் இம்மையில் செய்யவேணடியது எனக் கூறினார்.

அரசனும் அதன்படி வித்வத் சபை கூட்டி ஒரு கோயிலில் பொற்கிழி ஒனறையும் கட்டி பரத்துவ நிர்ணயம் செய்ய முயன்றான்.

ஸ்ரீ வில்லிபுத்தூரிலே கோயில் கொண்டுள்ள வடபெருங் கோயிலுடையான தனது பக்தன் விஷ்ணு சித்தர் கனவிலே தோன்றி 'நீர் மதுரை சென்று வல்லபதேவன் அமைத்துள்ள கிழியை அறுத்துவாரும்' என நியமிக்க, 'அவர் நலங்களாகிய நற்கலைகள் நான்கையும் கற்றறியாத அடியேன் என்ன சொல்வது' என விணணப்பிக்க 'உமக்கு அதைப்பற்றியென்ன நாம பார்த்துக் கொள்ளுகிறோம. சென்று வாரும்' என நியமிக்க, ஆழ்வார் மதுரை எழுந்தருளி வித்வத்சபை கூடிய மணடபத்துக்கு எழுநதருளினார.


*வி. கே. ஸ்ரீனிவாச ராகவாச்சாரி, சென்னை-45*


அங்குள்ள வித்வான்கள் விஷ்ணு சித்தர் வித்பத்தி இல்லாதவர் என்று சொல்லி அவரை சதஸ்ஸில் சேர்த்துக கொள்வதை ஆக்ஷேபித்தனர். ஆனால் அரசன் தக்க மரியாதையோடு வரவேற்று ஆசனமளித்து கௌரவித்தான்.

ஆழ்வார் எழுந்திருந்து சகல வேத வேதாந்தங்களையும்எடுத்துச்சொல்லி ஸ்ரீமந் நாராயணனே பரத்துவமான பரமன் என்ற கூறியவளவிலே பொற்கிழி வளைந்து ஆழ்வார் கையிலே வந்து நின்றது. இதைக் கண்டு எல்லா புலவர்களும் வணங்கி வாழ்த்தினர்.

அரசன் வல்லப தேவன் அதிக சந்தோஷங்கொணடு ஆழ்வாரை தன் பட்டதது யானைமேல் எழுந்தருளச் செய்து குடை, சாமரம் சகல மரியாதைகளுடன் வீதிவலம் வருங்கால், ஆகாய வீதியிலே தம் குழந்தையை தாயதந்தையர் காணவருவது போல ஸ்ரீமந் நாராயணன் பிராட்டியாருடன் கருடன்மேல் தோன்றி ஸேவை ஸாதிக்க, ஆழ்வார் மிகுந்த பக்தியுடனும் உவகையுடனும், யானையின் கழுத்திலுள்ள மணியைக் கழற்றி தாளமாக்கி,சர்வமங்கள ஸ்வரூபனை பகவானுக்கு அஸுரப்ரதிகளாலே என்ன தீங்கு வருமோ என சந்தேகித்து, யாதொரு தீங்கும் வராமல்

இருக்க பிரார்த்தித்து, 'பல்லாண்டு, பல்லாண்டு, பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு' எனத்தொடங்கும் பெரியாழ்வார் திருமொழி என்ற பிரபந்தத்தை அருளினார்.

வல்லபதேவன, ஆழ்வாரை சகல மரியாதைகளுடன் வில்லிபுததூர் கொணடு விட்டு வணங்கி சந்தோஷத்துடன் சென்ருன. ஆழ்வாருக்கு 'பட்டர் பிரான்' எனத் திருநாமம் சாற்றினார். ஆழ்வார் உடனே வடப்பெருங்கோயிலுடையான் திருவடியில் பொற்கிழியை வைத்து வணங்கினார்.

ஸ்ரீகண்ணபிரான் அவதாரம் முதல் பால்யத்தில் அவனுடைய லீலைகளை பெரிதும் அனுபவித்ததை தாயார் யசோதை கூறுவதுபோல் மிகவும் அழகான திவ்யபிரபநதப் பாடல்களின் மூலம் அருளினார்.

திருக்கணடம், ஸ்ரீரங்கம், திருமாலிருஞ்சோலை, திருவேங்கடம் இநத க்ஷேத்திரங்களிலுள்ள பெருமாள் விஷயமாகவும் பாசுரங்கள அருளினார்.

இந்த ஆழ்வாா அழகான நநதவனம அமைத்து வடபெருங்கோயிலுடையானுக்கு மாலை கட்டி சாத்தி வந்தார். ஒருநாள் அந்நந்தவனத்தில் துளசிச் செடியின் கீழ் ஒரு அழகிய பெண் குழந்தை இருக்கக்கண்டு அதற்கு கோதை எனத் திருநாமம் சாத்தி வளர்த்து வந்தார். அப்பெணணுக்கு இளமை தொட்டே எம்பெருமான் விஷயமாக பக்தி மேலிட்டுக் கொண்டு வந்து, அரங்கனையே திருமணம் செய்துக்கொள்ள விரும்பி, மார்கழி நோன்பு நோற்று திருப்பாவை என அழகிய 30 பாசுரங்களையும பல திவ்ய தேசத்து எமபெருமான் விஷயமாக 143 பாசுரங்கள் கொணட நாச்சியார் திருமொழியையும் அருளி, ஸ்ரீரங்கநாதன் நியமனப்படி அவரையே மணநதுகொணடார். பட்டர்பிரான் அரங்கனுக்கு மாமனாராக ஆனார்.

ஆழ்வார் விருப்பப்படி ஸ்ரீ வல்லிபுததூரிலே அரங்கர், ஸ்ரீரங்க மன்னாரும ஆணடாளும் திருமணக் கோலத்துடன் இனனும சேவை சாதிக்கிறார்கள்.

பெரியாழ்வார் எனப் பெயர் வரக் காரணம் :

1) வேதத்துக்கு பிரவணம் போல், நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்துக்கு காப்பு செய்யுளாக ''பல்லாண்டு' அருளிச்செய்தது.

2) மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணன், மோக்ஷம் அளிக்கும் பரமன் ஸ்ரீமன் நாராயணனே என்று உலகத்துககு விளக்கியது.

3) பூப்பிராட்டியாகிய கோதையைப் பெற்று, அவள் ''மானிடவாக்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன்'' என்று சொல்லி பகவத் பக்தியால் திருப்பாவை, நாச்சியார் திருமொழி என பாதரங்களை அளிதது உலகை வாழ்வித்தது காரணமானது.

4) அரஙகன் ஆணடாளை திருமணம் செயது கொண்டதால் அரங்கனுக்கு மாமனார் ஆகியது.

இவ்வாறான பெருமை கொண்டு, பக்திப் பெருங்குன்றின் சிகரத்தில் ஏறிய பரமனைப் போற்றிய பெரியாழ்வாருககு வணககம செலுத்துவோம்.

''சென்று கிழி அறுத்து மால் தெய்வமென்றான் வாழியே''

''வேதியா சோன பட்டர் பிரான் மேதினியில வாழியே.''



காஞ்சீபுரம்

## ஸ்ரீ வரதராஜ ஸ்வாமியும் ஸ்ரீ சூடிக்கொடுத்த நாச்சியாரும்

*ச. சுந்தரவரதாச்சாரியார்*
*காஞ்சீபுரம்.*

ஸ்ரீ ஆண்டாள் அக்காலத்தில் சூடிககொடுதத மாலையை பகவான கேட்டு அணிந்து, மணம் புரிந்தார் எனறு நாம அனைவரும அறிந்ததே. ஆனால் இப்போதும் ஸ்ரீ வரதராஜ ஸவாமி உதஸவ காலங்களில் அஸதகிரியிலிருந்து இறங்கி, பஞச பர்வ உத்ஸவம் முடிநத பிறகு, மறுபடியும அஸதகிரி மலைக்குத் தன் ஆஸ்தானத்துக்கு எழுநதருளும போது, ஒவ்வொரு தடவையும், ஸ்ரீஆணடாள் சன்னதியில் நினறு, தன் மாலையைச் சூடிக்கொடுத்த நாசசியாருக்கு அணிவிக்கச் செய்து, கறபூர ஹாரத்தி ஆனபிறகு, மறுபடி அதே மாலையை ஸ்ரீ ஸ்வாமி, சாததிககொண்டு, கற்பூர ஹாரத்தி ஆன பிறகுதான் ஆஸதானதுக்கு எழுநதருளுகிறா. இசசமபவம வேறு எந்த விஷ்ணு கோயிலில் நடப்பது கிடையாது. இவ்வூர் ஸ்ரீ வரதராஜஸ்வாமி கோவிலில் மட்டும் தான் ஒவ்வொரு தடவையும், சூடிக்கொடுத்த நாசசியாருக்குத் தனியான மரியாதை நடநது வருகிறது. இது தவிர, திருவாடிப்பூரம் உஸதவத்தின் போதும ஸ்ரீ ஸவாமிககும ஸ்ரீ ஆண்டாளுக்கும், ஸ்ரீ பெரியாழ்வார் முனனிலையில மாலை மாறறி, திருக்கல்யாண உத்ஸவம் நடைபெறுகிறது.

''சூடிக் கொடுத்தாள்'' என்னும் பெயர் இவ்வூா ஸ்ரீ ஆண்டாளுக்கு ஒரு தனி பெருமையை வழங்குகிறது.

*சென்ற இதழ்த் தொடர்ச்சி*

# உலகத்தோடு ஒட்ட ஒழுகல்-பல கற்றும்?

மேற்சொன்ன ஆபத்து விலங்குகளாலும், இடிமின்னல் முதலிய அறிவில் பொருள்களாலும் நேரிடலாம். அவற்றை இந்தப் பூவுலகில் களைந்து வாழ்தல் எங்ஙனம்? வழக்கில் வெற்றி பெறுதல் எவ்வாறு? கீழ்க் கண்ட பதிகத்தை நாள்தோறும் ஓதிவர எல்லா வழககுகளிலிருந்தும் மீளலாம் வெற்றிபெலாம் என்பது திண்ணம்.

## திருநெடுங்களம் : சம்பந்தர் திருமுறை :

**மறையுடையாய் தோலுடையாய்**
**வார்சடை மேல் வளரும்**
**பிறையுடையாய பிஞ்ஞகனே**
**என்றுனைப்பேசினலலால**
**குறையுடையார் குற்றமோராய்**
**கொள்கையினுல் உயர்ந்த**
**நிறையுடையார் இடர்களையாய்**
**நெடுங்களமே யவனே.**

**கூறுகொண்டாய் மூன்று மொன்ருக்**
**கூட்டியோா வெஙகணையால்**
**மாறுகொண்டார் புரமெரித்த**
**மன்னவனே கொடிமேல**
**ஏறுகொண்டாய் சாந்தமீ தென்றம்**
**பெருமான் அணிந்த**
**நீறு கொண்டார் இடர்களையாய்**
**நெடுங்களமே யவனே.**

**குன்றினுச்சி மேல்விளக்குங் கொடி**
**மதில் சூழ்இலங்கை**
**அன்றி நின்ற அரக்கர்கோனை**
**அருவரைக் கீழ் அடர்த்தாய்**
**என்று நல்ல வாய்மொழியால்**
**ஏத்தி இராப்பகலும்**
**நின்று நைலார் இடர்களையாய்**
**நெடுங்களமே யவனே**

**வெஞ்சொற்றஞ் சொல்லாக்கி நின்ற**
**வேடமிலாச் சமனும்**
**தஞ்சமில்லாச் வாய்மொழியால்**
**தோத்திர நின்அடியே**
**துஞ்சலில்லாச் சாககியிருந் தத்துவ**
**மொன்றறியார்**
**நெஞ்சில் வைப்பார் இடர்களையாய்**
**நெடுங்களமே யவனே.**

மேலும் மேற் சொன்ன முழுப் பாடல் தொகுப்பினை சம்பந்தர் திருமுறையில் இருந்து பாராயாணம் செய்யலாம்.

தீராத வழக்காயின் தொணடைமான்பட்டி அருகில் உள்ள திருநெடுங்களம் பதிக்குச் சென்று 48 நாட்கள் இப்பதிகத்தை 'நித்திய சுந்தரர்'பால் நைந்து நம்பிக்கையுடன் ஓதிட கோயிலில் வறியவர்க்கு அன்னதானமிட வழக்குகள் சாதகமாய் வெற்றிபெறும்.

## நாளும் நாமும் :

வாழ்க்கையில் நாளும் கிழமையும் செய்யும் காரியங்களைப் பகுத்தறிந்து செய்யவேணடும். எண்ணெய்த் தேய்த்துக் குளிப்பதில் நாட்கள் பார்த்து நல்ல நாளிலே நீராடினுல் நற்பொருள்கிட்டும். தீய நாட்களில் தீது பயக்கும். முழுக்கு நாள் பாடல் வருமாறு;

**வரும் ஆதிவாரம் தலைக்கெண்ணெய்**
**ஆகாது**
**வடிவமிகும் அழகு போகும்.**
**வளர்திங்களுக்கதிக பொருள் சேரும்**
**அங்காரவாரம் தனக்கிடர் வரும**
**திருமேவு புதனுக்கு மிகு புத்தி**
**வந்திடும்**
**செம்பொனுக் குயர் அறிவுபோம்**
**தேடிய பொருட்சேதம் ஆம் வெள்ளி**
**சனி யெண்ணய் செல்வம உண்டாயு**
**ளுண்டாம்**

மேற்சொன்ன நாட்களில் ஆகாத நாளன்று எண்ணெய் தேய்த்துக் குளிக்க நேரிட்டால் அதற்கு பரிகாரம் தேடும் வகையில் கீழ்க்காணும் பொருட்களைச் சேர்த்துக் கொளள தீது நீங்கும்.

**பரிகாரம உளதாதி வாரம தனக்கலரி**
**பௌமனுக்கான செழுமண்**
**பச்சறகு பொன்ன வறகாம்**
**எருத்தூ ளொளிப் பார்க்க**
**வறகாகும் எனவே;**
**அரிதா அறிநதபேர் எண்ணெய்**
**சேர்த்தே முழுக்காடுவர்.**

**அருஞ்சொற் பொருள் :**

செம்பொன் — வியாழன்
அலரி — அலரிமலர்
பௌமன் — செவ்வாய்
செழுமண் — செம்மண
பச்சறகு — அறுகம்புல்
பொன்னவன் — வியாழன்
எருத்துளொளி — எருப்பொடி
பார்க்கலன் — வெள்ளி

## ஆடையிலும் நாள் தேடி :

புத்தாடை உடுப்பதில் நாள் பார்த்து அணிய புதிய புதிய ஆடைகள் சேரும். பிணி விலகும். அதற்கு உரிய பாடலில் விளக்கம் அளிக்கப் பட்டுள்ளன. பாடல் வருமாறு:

**E. S. குமரன், B.SC.,**
**சேலம்**

**கறை மடாதொளி சேரும்**
**ஆதிவாரத்தனிற்**
**கட்டலாம் புதிய சேலை**
**கலைமதிககாகாது; பலகாலம்**
**மழையினிற்**
**கடிது நனைவுற்றெழிதரும்**
**குறைபடாதிடர் வரும்; வீரியம் போம்;**
**அரிய குருதி வாரந்தனக்கு; கொஞ்ச**
**நாளிற்கிழியும்; வெற்றிபோம்**
**புந்தியில்;**
**குருவாரமதிலணிந்தால் மறைபடாத**
**பூகுணடு மேன்மேலும்**
**நலலாடை வரும்; இனிய சுக்கிரற்கோ**
**வாழ்வுண்டு திருவுண்டு**
**பொல்லாத சனியற்கு வாழ்வுபோம்**
**மரணம உண்டாம்.**

# நினைவின் அலைகள்

திரு.கே. எஸ். சங்கர நாராயணன,
கல்பாக்கம.

என்றும் ஏஙகுகிறது என நெஞ்சம்,
உன் அருளுககேது பஞ்சம்!
என்மீது உனக்கேன வஞ்சம்?
நான் உன்னை அடைநதேன் தஞ்சம்.

கனவில் உன்னைக் கணடேனே,
உனனிடம் மையல் கொணடேனே,
நனவில் உன்னைத் தேடினேனே,
உன்னிடம் தோற்றுப்போனேனே.

எண்ணமெல்லாம் நீயே ஆனுய்,
எங்குசென்று மறைந்து போனுய?
கண்ணனே! அறிவேன் உன்மாயம்,
இங்கு வருவாய் இந்நேரம்.

குழலானேன் உன் செவ்விதழ்
களிலே,
நிழலானேன் உன் காட்டினிலே,
குரலானேன் உன திருவாயினிலே,
உரலானேன் உன் மாளிகையிலே.

ராதையும் நானே—உன்
கோதையும் நானே,
பேதை ராதை உன்
சீதை என்றும் தானே.

போதும்! போதும! உன்வெறுப்பு,
ஏதும்அறியாது போல்ஏன் நடிப்பு?
சூதும, வாதும், போதும் உனக்கு,
மாது என்மேல் ஏன இந்தப்
பிணக்கு?

மேதை பலர் போற்றிடுவார்உன்னை,
பேதை அறிந்திலேன் போறற
உன்னை,
பாதை தெரிநதிலேன அடைய
உன்னை,
கோதை நினைககின்றேன என்றும்
உன்னை.

என் எண்ணம்நீ, எண்ணத்தின்
வணணம் நீ,
என் எண்ணத்தின சொல்லும் நீ,
சொல்லின செயல் நீ,
என் சொல்லின ஒலியும் நீ,
ஒலியின் அலை நீ,
என் அலையின வேகமும் நீ,
வேகத்தின ராகமும் நீயே.



அருஞ்சொற் பொருள் :
கலை — ஆடை, புந்தி — புதன்
குருதிவாரம் — செவ்வாய்.

## மனை புகுதலில் :

புது வீட்டிறகு புகுதல செய்யும் நாளும் நல்ல நாளாய இருகக வேணடும. தாம் புகுந்த நாளைக் கருதித்தான் வரவிருக்கும் ஆதாயத தினைக் கணடு விடுவதோடு தவறி வேற்று நாளில் மனை புகுந்த நேரத்தில் வரும் இடரினையும் அனுபவிக்கும் மாந்தர்களை நாம் வாழ்க்கையில் சந்தித்திருக்கிறோம அல்லவா ? இது இப்படி நடந்தால் என்ன என்பதை விட இது இப்படிதான் ஆகும் என்று ஊகித்து நாளும் கிழமையும் பார்த்துச் செய்தல் அவசியம்.

சித்திரைத் திஙகள் தனில் மனைகோல மனைபுகச்
செல்வம் உணடதினும நலமே
சேரும் வைகாசிககு; மேனுள
அரன்புரம் தீயிட்ட தானியாகா
வெற்றிகொள இராகவன தேவி சிறைசேர் கடகம்
வீறலல ஆவணி சுகம; மேலிடும
கன்னியிரணியன் மாண்டதாகாது;
மேனமையுண்டைப் பசிக்கே.
உததமம காாத்திகைககாகாது
மாாகழியில் ஒஙகு பாரதம
உயர்வுண்டு மகரத்தில் மாசிமாததத்தில்
விடம உமபர் கோன் உண்டதாகாது
அதத நீ! மாரனை எதிர்தத பஙகுனி
தானுமு ஆகுமோ ?

அருஞ்சொற் பொருள் :
கடகம் — ஆடி
வீறல்ல — நலலது அலல .
கன்னி — புரடடாசி
மகரம் — தை
உம்பர்கோன — சிவன்.

## கற்பூர ஒளியின் தாத்பர்யம்:

ஆலயநதோறும் செனறு வழிபாடு செயகையில் தீபத்தின் தன்மையை விளககுவதற்கு ஒரு பழம் பாடலின் கருத்து வருமாறு

தேங்காய எணணெய் கொண்டு ஒரு கோடி தீபங்களை ஏற்றிவைப்பதன் பலன் 1 நல்லெணணெய் விளக்கினை ஏறறி வைத்ததறகு ஒப்பாகும்.

நல்லெணணெய் கொணடு ஒரு கோடி தீபங்களை ஏறறிவைப்பதன் பலன பசுநெய்யில் 1 விளக்கினை ஏற்றி வைப்பதற்குச் சமமாகும.

1000 விளக்குகளை பசுநெயயால் ஏறறிவைபபதன் பலன் 1 இலுப்ப எணனெய் விளக்கினை ஏற்றி வைப்பதன பலனுகும்.

1000ம் இலுப்ப எணணெய் விளக்குகள் ஏற்றிவைப்பதன பலன் கற்பூர தீபாராதனையைக் காட்டிலும் உயாந்தது இல்லை.

ஆகவே கற்பூர தீபாராதனையைக் காட்டிலும் இறைவனுக்குச் செய்யும் சேவார்த்திகள் அத்தனை பயன் நல்குவது இல்லை.

ஆகவேதான் ஆலயங்களில் கற்பூர ஆரத்திகாட்டும்போது ஆணடவனைத் தரிசிப்பதில் அத்தகைய ஆாவம் பக்தர்கள பால் உளளது.

மேலும் எல்லையறற பூடவெளியில் கோடி சூரிய பிரகாசத்துடன் விளங்கும் ஆணடவன காப்பக்கிரகததில் இருளில் வாழகிறுன. ஆசாரியர் கற்பூர ஒளிகொணடு இறைவனின திவ்ய ரூபத்தைக் காட்டும போது இறைவனின் தேஜஸ் அந்த ஒளியில் பக்தர்களுக்கு ஆறுதலைத் தருகிறது. அதனுல்தான செயற்கை ஒளியால் கர்ப்பக்கிரகததை அலங்காரம் செய்ய அனுமதிப்பதில்லை.

## கோள் ஆட்டம் :

நம்மால் சாதிகக முடியாதபோது தான் விதியைநொநதுகொள்கிறோம்; சோதனை வரும்போதுதான் மேலான சகதியை நம்புகிறோம்! ஆட்டம் தோறகும்போதுதான் அதிருஷடத்தைப் பழிக்கிறோம்.

விதிக்கு விதி வைத்தால் விதி துடித்துச் சாகும். விதியை விரட்டிச்

(28-ம் பக்கம் பார்க்க)

# சுக்கிரன்

பாரம்பரியம் வளர வாழக்கைக் கடலின கப்பல கட்டாக விளங்கும் கிரகமாம சுக்கிரன் சூரியனைத் தொடர்ந்து ஆருவது கிரகமாக வெண்சுடர் ஒளிர பூமியை வலம் வருகின்ருன்.

*மூர்க்கவான சூரவாணன முதலினோர்*
*குருவாம் வையம்*
*காககவான் மழைெயயவிக்குங்*
*கவிமகன் கனகமீவோன்*
*ரீர்க்க வானவர் போற்றச் செத்தவர்*
*தமைெயழுப்பும்,*
*பார்ககவன் சுக்ராசாரி பாத*
*பங்கயமே போற்றி போற்றி*

என போறறி மாலையால் அலங்கரிக்கப்படும் சுக்கிரனை சுங்கன், மழைக் கோள், சிதம, வெள்ளி என்று அழைக்கின்றோம். மறறும விடி வெள்ளியாக திகழபவனும இவனே.

இவனது தோறறம் பற்றி பல வரலாறுகள் உள்ளன 'ப்ருகவே' 'ப்ருகுஸுதாய' என்பன பிருகு முனிவருடைய புதல்வன் என்கின்றன. இவன ஆயிரம் ஆணடுகள தவம் நோற்று சிவனிடம் மிருத சஞ்சீவினி மந்திரத்தை உபதேசம் பெற்ருன். தேவ அசுர போரில் அசுராகளுக்கு குருவாக விளங்கி தேவகுருவான வியாழபகவானுக்கு எதிரியாக அசுர குரு என பெயர் பெற்ருன்.

சுகாரச்சாரியார் என புராண வழிகளில் அழைக்கப்படும் சுக்ரன் தேவர்களுக்கு எதிராக நடந்த போரில இறந்த அசுரர்களை மிருத சஞ்சீவினி மந்திரததால் எழுப்பியதால் தேவர்களுக்கு உதவும் பொருட்டு சிவனுல் என்றும், இந்தப் பர்வதம் சிவக்ஷேத்திரமென்றும், நடுவில் சில வைஷ்ணவர்களகூடி ராஜ பக்ஷபாதங்கொண்டு விஷ்ணு விக்ரங்களைப் பணணிக் கொணடுவநது கோயிலிலே வைத்து உத்ஸவாதிகளை நடப்பித்தார்க'' ளென்றும், வாமன புராண வசனங்

தவயோகங்களால சிறப்புப் பெறற சுக்ராச்சாரியார் தனதுமாணக்கனும் வியாழனின மகனுமான கசனுககு மிருத சஞ்சீவி மந்திரத்தை கற்றுத் தநதான். மகாபலி சக்ரவர்ததி வாமனனிடம் மூனறடி நிலம் அளக்குமபோது கமணடல நீரை தடுக்க வணடு உருவில் அதன் துவாரத்தை அடைததபோது திருமால தர்ப்பையால் (புல்லால்) குத்தினமையால் ஒரு கண்ணை இழநதான். நீதிமார்கதாய-சுக்ரநீதிசாஸதிரத்தை வழங்கியவன்.

இவனது குணங்களை அறிநது கொள்ள சோதிட நூல்களை நாடலாம. பார்க்கவன, புகர் என்ற பெயர்களால அழைககப்படுகின்ருன். 'கல்யாண தாயகாய', 'கலயாண குண வர்தததநாய' — களஸ்திரகாரகன் களஸ்திரகுண விவரம் அளிப்பவன. பெணகிரகம் சௌமிய கிரகம், ஸ்திர கிரகம். இராஜசர் குணம் கொண்ட சேததுமக்கிரகம்.

இவனுக்குரிய திக்கு - கிழக்கு, ஆசனம்-ஐஙகோணவடிவம, உலோகம்-வெள்ளி, ரத்னம்-வைரம், தானியம்-மொச்சை, புஷ்பம்-வெண்டாமரை, சமித்து-அத்தி. குளிர்ச்சியாக புசிப்பவன். சுவை-தித்திப்பு. இவனதுவாகனம்-கருடன். அப்புக் கிரகமான இவனது தேவதை பிரமன், வள்ளியம்மை.

இவனுககுரிய தேசம கௌதமை நதிமுதல் கிருஷ்ணு நதி வரை. ரிஷபத்திலும், துலாத்திலும ஆட்சியாகவும், மீனத்தில் உச்சனுகவும் விளங்குகிருன. களஸதிர, வாகன காரகன. இவனுடைய தசை இருபது வருடங்கள. காமததிற்கும் இநதிரியததிற்கும் அதிகாரி. மனைவிக்குரியவன். லகனத்தில குருவுடன் கூடி இருநதால அச்சாதகன சாமல யோகம உடையவன. அதாவது இரு அழகிகள் சாமரம் வீசும் பாக்கியன்.

பனனிரெணடாம் அதிபதியோடு சுக்கிரன கூடுவதால் மறுமையில தெயவலோகம கிடடும் என்கிறது கிரக சிநதாமணி. முககாற சுபனை இவன் மூன்று, நான்கு, எட்டு, பனனிரெண்டில நின்ருல் நல்ல பலனைக் கொடான்.

**எஸ். உமாமகேஸ்வரி, B SC,**
**தஞ்சாவூர்**

இவனுக்குரிய க்ஷேததிரம ஸ்ரீரங்கம மூாததி ஸ்ரீரங்கநாதர் காயத்ரீ மந்திரம்.

*அச்வதஜாய வித்மஹே தநுர் ஹஸதாய தீமஹி /*
*தநந: சுகர. ப்ரசோதயாத*

சூரியனுககுக் கிழககு திக்கில பஞ்சகோண மண்டலத்தில் பூசிக்கப்படும் இவன் நான்கு திருக்கரங்களுடன் சடைமுடியுடன திகழ்கின்ருன். அத்திருக்கரங்கள அட்சமாலை, வரதம், கமணடலம், தணடம ஆகியவை கொண்டு விளங்குகின்றன. சாநத மூர்த்தியான சுந்தர ரூபன், வெண திருமேனியான். வெணணிற ஆடையும், வெணணிற புஷ்பமும் பூணடு வெண்மணிமாலையோடு வெணணிறக் கொடி, வெண்ணிறககுடைவிளங்கும் பஞ்சகோண பீடம் கொணட தேரில் மேருவை வலம வருபவன்.

இவனுக்குரிய வாரம் வெள்ளி. சக்தி வழிபாடும் இவனது வாரத்தில தான்.

**'தேய்ந்தனின்னிடையாள் தேவி திகள்**
**விரதங் கொண்டாள்**
**ஆய்ந்த முப்பழியுந் தீரும் அடர்குலம்**
**விர்த்தியுண்டாகும்.**

என சநதிரநாடி எனும் நூலில வெள்ளி விரதத்தின் நன்மை விளங்குகிறது.

'சீருடைய பார்க்கவற் கதிபோக வழியு மாந்
திருவுமுணடாயிருபபான.

என வெள்ளிபூப்பு வாரமாகில போகமும், செல்வமும கிடடும் என்றும்,

'புகரவற காகிலோ நெடுநாள் விரோதமாய்ப்
போன வுற வுந்திருமபும'

எனறு வெள்ளி வாரம் விருந்துணணு தலின் பலனையும,

'உருமினிய சுக்கிரற் கோ
வாழவுண்டு திருவுண்டு'

சுககிர வாரமதில புத்தாடை உடுக்க வாழ்வும் திருவும் உண்டாகும் என்றும் அறப்பளீசுரததகம் கூறு கிறது.

சுக்கிரனுககுரிய வாரமான சுகரவா ரத்தில அவனது சநநிதியில் அவனுக குரிய கோலததை இட்டு சுக்ரஸ்துதி ஸௌர்நதர்ய லஹரி கூறி, பிரார்த் தித்தால் சாநத இனிய சொரூபன விவாஹப் பிராப்தியும், சௌபாக் கியமும், மலட்டு நீக்கமும் அருளு வான.

இவன மாரகனுகில் சுக்ர சாநதி, வெண்டாமரை புஷ்பத்தினுல அர்ச சனை நமஸ்காரம, அத்தி சமித தினுல் ஓமம, மொசசைப் பருப்புத தானம், துாககையமமனுககு விசேஷ அபிஷேக ஆராதனை, துாக்கா சகஸ்ர நாமபாராயணம செய்தல்வேணடும்.

அசுர குருவானவனும், செத்தவா தமையெழுபபும் சுக்ராச்சாரியாரு மானவனும், சௌபாககியம அருளு பவனுமான சுநதர வடிவும், வெண நிறமும கொணட சுககிரபகவானை வழிபடடுப போறறி, அவனருளை பெற்று உயவோமாக.

சக்தியை நம்புகிறோம்! ஆட்டம் தோறகும்போதுதான் அதிருஷ்டத தைப் பழிக்கிறோம்.

விதிக்கு விதி வைத்தால் விதி துடித்துச் சாகும். விதியை விரட்டிச்

(28-ம் பக்கம் பார்க்க)

# திருமலை ஒழுகு

ஸ்ரீ திருவேங்கடமுடையான் கலியுகாதியிலே ஆச்ரிதனான தொண்டைமான் சக்ரவர்த்திக்கு ஆபந் நிவாரகமாகத் திருவாழி திருச்சங்கைப் பிரசாதித்த காலந்தொடங்கி எம்பெருமானார் திருவரங்கந் திருப்பதியிலே விஷ்ணுதத்வ ப்ரதிஷ்டாபநாசார்யராய் (நிலை நாட்டும் ஆசார்யராய்.) எழுந்தருளியிருக்கிற காலத்திலே, சில நாளளவும், திருக்கைகளிலே திருவாழி திருச்சங்கு இல்லாமலிருக்க, அப்போது சந்நிதியில் இருக்கும் வைகாநஸர்கள், திருவேங்கடமுடையான திருமேனிக்கு உசிதோபசாரங்களைப் பண்ணாமல், உத்கடப்ரவ்ருத்திகளைப் (கூடாத செயல்களை) பண்ணிக்கொண்டிருக்க, தேசாதிபதியானவன் கண்டு, அவர்களுக்கு உகரசிக்ஷைகளைப பண்ணின தினாலே, ஸ்தலத்திலே பெரியோர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் இல்லாமலிருக்க, அந்தக் காலத்திலே சில சைவ ஜனங்கள், அந்தத்தேசாதிபதி ஆஸ்தானத்திலே வந்து, "தங்கள் தேவதையான குமாரஸ்வாமியானவர் இந்த மலையிலே வந்து தபஸ்ஸைப் பண்ணுகிறார்'' என்று வாமன புராணத்திலே ஸ்ரீ வேங்கடாசல மாஹாத்ம்யத்திலே த்ரிதீயாத்யாயத்திலே விஸ்தாரமாய் இருக்கையாலே "இந்தக் கோனேரிக்கரையில் இருக்கும் ஸ்வாமியானவர் குமாரஸ்வாமி; இவர் தபஸ்ஸைப் பண்ணுகிறவராகையாலே, அவராயுதங்களான பாசாங்குசங்கள இல்லையென்றும், ஸ்வாமி புஷ்கரணியென்று பேருண்டாச்சுது என்றும், இந்தப் பர்வதம் சிவக்ஷேத்திரமென்றும, நடுவில் சில வைஷ்ணவர்களகூடி ராஜ பக்ஷபாதங்கொண்டு விஷ்ணு விக்ரஙகளைப் பணணிக் கொணடுவநது கோயிலிலே வைத்து உத்ஸவாதிகளை நடப்பித்தார்க'' ளெனறும், வாமன புராண வசனங்களுககு, புராணாந்தரஙகளோடு சாமஞ்ஜஸ்யமாக பூர்வோத்தர பராமர்சம் பணணாமல், (முனபின் விசாரியாமல்) ஆபாததঃ ப்ரதீயமான (மேலெழுந்தவாரியாகத் தோன்றும்) அர்த்தங்களைச் சொல்லிக் கொணடு நிற்க, ராஜாவும் இரணடுங் கேட்டு, விசாரமிட்டு அத்ய பாயநததுக்கும் (இனறு வரைக்கும்) இநதப் பர்வதம் விஷ்ணு க்ஷேத்திரமென்றும், இதிலே நிதய வாசம் பணணுகிறவர் விஷ்ணுவென்றும், இந்தத் தீர்த்தம் விஷ்ணு தீர்த்தம் என்றும் ப்ரஸித்தமாய் ஸ்ரீ வைஷ்ணவர்கள் தானே இவர்க்குப் பூஜா மஹோத்ஸவாதிகளையும் நடப்பித்தார்களே: இப்போது சைவஜனங்கள இப்படிச சொன்னார்களேயென்றும் விசாரமிட்டுக் கொண்டிருக்க, அப்போது ஸ்தலததிலே பெரியோர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் இலலாமையாலே, இருநத பேர்கள ராஜ ஸ்தானத்திலே போய்ப் புராணார்த்தங்களைச் சொல்லி விஷ்ணுவென்று நிரவஹிக்க மாட்டாமல் அசக்தராய்க் கோயிலிலே எழுந்தருளியிருக்கிற எம்பெருமானார் சநநிதிககு இநத விர்ததாந்தத்தை எழுதியனுப்ப, எம்பெருமானாரும இத்தைக கேட்டருளிச் சீக்கிரமாகத் திருப்பதியிலே எழுந்தருளி, தேசாதிபதியை ஆசீர்வாதம் பண்ணி, அஷ்டாதச புராணங்களிலே வேங்கடாசல விஷயமான புராணங்களிலே யிருக்கிற வேங்கடாசல மாஹாத்மிய வசனஙகளைப் பூர்வோத்தர விரோதமின்றிக்கே ஏகவாக்யதாபந்நமாம்படி உபந்யஸித்தும், (ஒரு பொருளுக் கிசைந்ததாம்படி) ஆழ்வார்கள் ஸ்ரீ ஸூக்தியையும் அவிகீதமான (வேதம முதலிய வற்றிற்கு முரணில்லாத) சிஷ்டாசாரங்கள், உக்தி அனுஷ்டானங்களையும் உபநயசித்தும், இவரே ஸ்ரீ மஹா விஷ்ணுவென்று அருளிச செய்ய,

ராஜாவுங் கேட்டு, உபயவாதி புராணஙகளின வசனங்களாலே ஒரு நிச்சய மின்றிககே மத்யஸ்தனாயிருக்க, அப்போது எம்பெருமானாரும் ராஜாவைப் பாரத்து,

> தாசயந பக்தவாத்ஸல்யம யோ
> ததெள ஹஸ்தங்க சுபே!
> சஙகசக்ரே ந்ருபேந்த்ராய சக்ரவர்த்திநியம் விதுঃ ||
> அத ஏவாரிசங்காப்யாம் ஸந்த்ருச்
> யேதே விநா கரௌ |

என்று ப்ராஹ்ம புராணத்திலே ஸப்தமாத்யாயத்திலே இருககிறபடியே, கலியுகாதியிலே யிருநத ஸ்வாமியானவர, தம்முடைய பகதனான தொணடைமான் சக்ரவர்த்திககுச் சதரு ஸம்ஹாரார்த்தமாகச் சங்க சங்கரங்களைக கொடுத்தாரென்று தொடங்கி, திருவாழி திருச்சங்கு இன்றியே இருககிறார் என்று, விசேஷித்துப புராணார்த்தத்தை யருளிச செய்ய, அதனாலும்ராஜாவுக்கு நிர்தாரணம் பிறவாமலிருக்க, அப்போது எம்பெருமானார் பிரதயக்ஷமாகவே ஒரு நிச்சயம பிறக்கும்படி ஒருவார்த்தை சொலலுகிறேன என்றார். (அஃதாவது) "நான் ஸ்ரீ மஹாவிஷ்ணுவென்று சொன்னேன்; சைவர்கள் சுப்ரஹ்மண்யன் என்றார்கள்; இநத ஸம்சயம் போகைக்கு நான் விஷ்ணுவுக்கு அசாதாரணமான சங்க சகரங்களைப்பணணிக் கொணடுவந்து, ஸ்வாமி சந்நிதியிலே வைக்கிறேன், சைவர்கள் சுப்ரஹ்மணயனுக்கு அசாதாரணமான பாசாங்குசங்களைப பண்ணிவைக்கக் கடவாகள்; எந்த ஆயுதங்களை எடுத்துத் தரித்தாரோ அந்த ஆயுத தரரான தேவராகக் கடவர்'' என்ன,

ராஜாவுங கேட்டு "அப்படியே செய்யுங்கோள்'' என்ன, இரண்டு வாதிகளும் அந்தந்த ஆயுதங்களைப்

பணணிககொணடு ராஜாவையுங கூட்டிககொணடு திருமலே ஏறி, ராத்ரி காலத்திலே, ஸவாமி கர்பபக ருஹத்திலே வைத்து ராஜ முத்திரையும் பணணுவித்துக காவலாயிருக்க, பினபு பிராத காலததிலே கதவைத் திறநது பாாக்குமபோது ஸ்வாமியானவா சங்கு சக்கரங்களைத் தரிததுக கொண்டிருகக, பினபு ராஜாவுங் கணடு ஸந்துஷடனுய் (மகிழ்நதவனுய்) எமபெருமானுர் திருவடிகளிலே ப்ரதிபநநனுய், (பகதியுடையவனுய்) இவர் சொறபடிக்கு அநதச் சைவாகளை அவர்கள் சொன்ன அஸதயானுகுணமாக நிக்ரஹித்து, (பொய்ககுத் தக்கபடி) தேசத்துக்குப் புறமபாகத துரததிவிடடு, எம்பெருமானுா திருவடிகளிலே ஆச்ரயித்து கருதார்த்தனுயிருக்க,

பின்பு எமபெருமானுரும், இநத திருமலேயிலே எழுந்தருளியிருக்குமவரே ஸ்ரீவைகுணடநாதனுய ஸ்ரீய:பதியான ஸ்ரீமஹா விஷ்ணுவென்று சகல தேசஙகளிலும அறியுமபடி நிர்வஹித்து, ஸ்ரீ வைகாநசாகமத்தாலே சம்ப்ரோக்ஷணமும் பண்ணுவிதது, நித்யாராதனமும் கணடருளும்படி ஸங்கல்பித்து ஸ்ரீவிஷ்ணு தத்வப்ரமான திருவாழி திருசசங்கு சாத்தி வைத்த மாத்ரமன்றிககே, பூர்வம் நிசுளமான (உயர்நத) திவய விமானத்திலே ஸ்ரீவைகாநச சாஸ்த்ர ப்ரகாரத்திலே நாலு திக்குகளிலும், வராக, நாரஸிம்ம, வைகுண்டநாத, ஸ்ரீவேங்கடேச தேவதைகளையும், ஏறியருளப் பண்ணுவித்தும், விஷ்ணு பரிகரங்களான சேஷ, சேஷாசன, (சேனை முதலியார்) கருட, துவார பாலகர்களையும் தத்தத் ஸ்தானங்களிலே ப்ரதிஷ்டை பண்ணுவித்தும, சந்நிதியிலே திவ்யைச்வர்யம் உண்டாகும்படிக்குத திருமார்பு நாய்சசியாரான அலர்மேல் மங்கையை,

**த்விபுஜா வ்யூஹலக்ஷமீः ஸ்யாத் பத்த பத்மாஸநப்ரியா|**
**ஸ்ரீநிவாஸாங்கமத்யஸ்தா ஸுதாரம் கேசவப்ரியா||**

என்று வராஹபுராண ஸித்தமான படியே, தவிபுஜையான (இருகைகளையுடையவளான) வயூஹ லக்ஷமியாய்ச சேவை ப்ரசாதிககும்படி ஸங்கலபிததுச் சுகலத்வாதசியும சுக்ர வாரமும,உததர பல்குனீ நக்ஷத்ரமும கூடின மஞ்சரிகா யோகத்திலே திருமாாபிலே சாத்துவிததும், திருவேங்கடமுடையானுக்கு ஆதிகாலமாரப்ய நித்ய திருமஞ்சனம் கொணடருளும் படியைக் கேட்டருளி, இப்படி நடந்தால், திருமேனிக்கு உசிதோப சாரங்கள பூர்ணமாக உண்டாக மாட்டா என்று,

**கிஞ்ச லக்ஷ்ம்யாபிஷேகஸ்து வாஸரே பாாகவே ஹரே:|**
**ஸாந்நித்யகாரீ ஸததம் ஸர்வஸம்பதப்ரதாயக:||**

என்று வைகாநஸ (ஆகமத்தில்) சாஸ்த்ரத்தில் ஆனநதஸம்ஹிதையிலே இருக்கிறபடியே சுக்ரவாரத்திலே அலர்மேல் மஙகை நாய்ச்சியார் திருமார்வினின்று மிழிநதருளித் திருமஞ்சனங் கொணடருளுகிறத்துககு முன்னுக ஸ்வாமியுந திருமஞசனங் கொண்டருளும்படி கட்டளை பணணியும,

**அஷ்டமீந்துகலாகாரலலாடஸ்த்தோர்தவ| புண்ட்ரக:**

என்று பாதமபுராணீயமாய,

**நாஸிகாமூலமாரப்ய ரேகாதவிதயஸமயுதம்||**
**தாரயேதூர்தவ புண்டரநது ஹரே: பாலதலே சுபே|**

எனகிறபடியே ஸ்ரீவைகாநஸ சாஸ்த்ர ஸித்தமாய ஸ்ரீப பதிககு அஸாதாரணமாய் ரேகாத்விதய ரூபமான (இருகோடுகளின வடிவமான) திருமண் காபபை நாசாதி கேசாந்தமாகச் (மூக்கு முதல தலைவரை) சாதது வித்து, இபபடிக் கட்டளை பணணின மறுநாள சுகரவாரமாய அனறு திருமஞ்சனம பணண, அதனுலே, திருநெறறியிலே சாத்தினஊா தவபுண்ட்ர ரேகையானது அழிநது, அநத ரேகைக்கு மூலமான நாசாதியிலே சாத்தின, அர்த்த சநத்ராக்ருதியான (பாதி சந்திரன் வடிவமான) திருமண் காபபு அழியாமலிருகக, இநதப் பிறைத்திருமணகாபபை எம்பெருமானுா கடாக்ஷித்தருளி, பூாவம, ஜகந்மோகினியான அவதார தசையிலே திருநெற்றியிலே இருநத பிறைத் திருமணகாபபு அங்கேயிருந்த தேவாசுரர்களுககு மோஹகமாய் இருநதாற் போல, இநத ஜகந் மோஹனமாய இருக்கிற திவ்ய மங்கள விகரஹத்திலே, நாசாதியிலே காணபிககிற பிறைத்திருமணகாபபும், ஸவாமி திருமுக மணடலததுக்குச் சோபாவகமாய் ஆச்ரிதர்களுக்கு த்ருஷ்டி சித்தாப ஹாரியாய் (கணணையும மனதையும் கவரத்தக்க தாய்) இருக்கையாலே, இந்தப்படியும் சில நாள் சாததியருள வேணுமென்று திருவுள்ளத்திலே எண்ணிக கொண்டிருகக, அப்படியே பகவதநுக்ரஹமும ஆச்சக முகத்தாலே உணடாக, எம பெருமானுரும, பினபு திருவேங்கடமுடையான் சுக்ர வாரத்திலே திருமஞ்சனங் கொணடருளின பின்பு, கர்ப்பூர ரேணுக்களாலே (பொடிகளாலே), திருநெற்றியிலே ரேகாத்வய ரூபமாகக் சாத்தியருளிய திருமண காபபை மூனறு நாள் தரித்துக் கொண்டிருககு படிக்கும்,

**ஆதௌ க்ருதயுகே ஜமபூத்வீபே பாரத வர்ஷகே|**
**கங்காயா தக்ஷிணே பாகே யோஜநாநாம் சதத்வயே||**
**ஸப்தயோஜனமாதரேண பூாவாம் போதேஸ்து பச்சிமே|**
**மாஸே பாத்ரபதே விஷ்ணுதித்யாம் விஷ்ணுஸமந்விதே||**
**ஸித்தயோகே ஸோமவாரே ஸௌரெள நாராயணுஹ்வயே|**
**ஸ்வாமிபுஷ்கரணீதீரே பச்சிமே பூத்யபச்சிமே||**
**ப்ருந்தாரகாணும பருந்தைஸ்து ப்ரார்த்திதோ லோகரக்ஷக:|**
**ஆவிர்பபூவ பகவாந் ஸ்ரீநிவாஸ: பர: புமாந்||**

என்று ஸ்ரீபாத்ம புராணத்திலே 33-வது அத்யாயாவஸாநஸ்தலததிலே இருககிறபடியே, திருவேங்கடமுடையானுக்குத திருவவதார வாஸரமான (தினமான) சோமவாரத்திலே தாம் எ ண ணி ன ப டி யே பகவதநுகரஹமுணடான படியாலே நாசாதியிலே பிறைத் திருமணகாப்பாகச சாத்திக கொளளுமபடிக்கும, திரு நெ ற் றி யிலே, ரேகாத்வய ரூபமாக முத்துத் திருமணகாபபும், திருககண மலருக் குச் சீதள தரவ்ய விசேஷத்தாலே அஞ்சனக் காப்பும் சாத்திக்கொணடு, சேஷதினமெல்லாம், எல்லார்க்கும் ஸேவை ப்ரசாதித்தருளும் படிக்கும், சூரனுயிருக்குமவன், தன்னுடைய சௌர்ய சாதனமான ஆயுதத்துக்கு பரதமம் சநதன கு சு ம ங் க ளை த் (பூக்களை) தரிப்பித்த பின்பு தான் தரிககுமாப்போலே தி ரு வே ங் க ட முடையானும் நித்யம் த்ரிசநத்யையிலும திருமாலை சாத்தியருளும்போது தமமுடைய விஜய பரமபரைகளுககு ப்ரதான சாதனமான தி ரு வா ழி திருசசங்கு, திருப்பொற்ருழ்வார் களுககுத் திருமாலைசார்த்திய பின்பு, திருமாாபு நாய்சசியாா, திருவபி ஷேகம் (திருமுடி) முதலான திவ் யாவயவங்களுக்கும திருமாலை சாத தும்படிககும, சுகரவராநதோறும, திருவேஙகடமுடையான திருமஞ சனம கொ ண ட ரு ளு ம் போது, "இறையுமகலகில்லேன" என் று நித்யாநபாயினியாய் (எப்போதும் பிரியாதவளாய்) வலமார்பினில் வாழ்கின்ற மஙகையான அ ல ர் மே ல் மஙகை நாய்ச்சியார் திருமார்பினின றும இறஙகியருள, தத்கால மாத்ர விசலேஷத்தைச் (பிரிவை) சகிகக மாட்டாமலிருககும ப்ரகிருதியை எமபெரு மானுா சிநதிதது, தத் அபராவதாரமாய், தத் ப்ராண சகியாயப பூமி யம்சையாயத திருவவ தரித்தருளின ஆழ்வாா திருமகளான வர் திருததுழாய் பரிமளத்தோடே முளைக்குமாப்போலே பகவத் ப்ரேமத் தோடே அ வ த ரி த் த ரு ளி ன து தொடங்கி எம்பெருமானை அநுபவிக்கைக்கு ஆசைப்பட்டு, அது கிடையாமையாலே, அவனைப பெறுகைக்கு உபாய விசேஷங்களிலே கை வைத்த படியையும், அவன பககல் தூது விட்டபடியையும, அவனுடைய ஸ்திதி, கமந, சயநாதிகளுக்கு யோகயமான திருப்பதிகளை அநுபவித்த படியையும, இபபடி அநேக விரகத சையை அநுசந்திதத படியையும், ப்ரகாசிப்பிக்கிற நாய்ச்சியாா திரு மொழியைத் திருவேங்கட முடை யான் புருஷ ஸூக்தாத்யநேக ஸூக்த பாராயணத்துடனே திருமஞ்சனம் கொணடருளினவனந்தரம், அலர் மேல்மங்கை நாய்ச்சியார் திருமஞ் சனம் கொணடருளுமபோது (இந்தப் பிரபந்ததததை) அ நு ச ந தி க் கு ம் படிக்கும்,

தி ரு ம லை ஸம்ஸ்தானமானது காடும் மலையுமாய்த் திவ்யநகரத்தை விஸ்தாரமாக்கிக் க ட் டு கை க் கு யோக்ய மல்லாமையினலே, பூர்வ காலத்திலே செணடிவாள னென்பா னெருவ பக்தனுனவன் கோயிலுக்கு மேற்காயத் திருமதிளோரமாய் ஒரு வீதியைக் கட்டுவித்து, அதிலே, கைங்காயபரா மாத்திரம நித்ய வாசமாய் இருக்கும்படி பணணினுன். அந்தக காலத்திலே தேசாதிபதிகளான விஷ்ணு பக்தாகள், பெருமான் உத்ஸவம கொணடருளும் படிக்குத் திருவீதி கட்டுகைக்கு சம தடமில்லாமலல்லாமையாலே,

தேவஸ்தாநஸ்ய பரிதஃ
வீதிகாகரணக்ஷமே
ஸமீபே வா புரீம் க்ருத்வா தத்ர
தேவோத்ஸவம் சரேத॥

என்று வைஷ்ண வாகமங்களிலே இருந்தபடியே வேஙகடத் துறைவார் ப்ரமோத்ஸவ ஆரம்பதினத்திலே திருக்கொடியாழவான் ஏறியருளின பினபு, திருமலையிழிந்து மஹாநகர மாய ராஜாஸதானமான திருச்சுக னூரிலே எழுநதருளியிருநது நித்ய மாக ப்ராதஸ் ஸா ய ங் க ளி லே (காலை மாலைகளிலே) வாகனத்தோடே திருவீதியெழுந்தருளி ஸமஸதோபசாரங்களும கண்டருளி உத்ஸவ ஸேவாபரரையும் உஜ்ஜீவிப்பித்து (கடைததேறச செயது) ஒனபதாந் திருநாளிலே சா ய ங் கா ல த் தி லே திருமலை யேறியருளித துவஜாவ ரோ ஹ ண ம் (கொடியிறக்குதல்) கொணடருளும்படி பணணின கட் டளையை எமபெருமானுர் கேட்ட ருளிச சிநதித்து, இந்தத திவய க்ஷேத் திரத்திலேயே தானே ப்ரதிஸம்வத் ஸரம் ஸ்வாமி உத்ஸவம் கொண டருள வேணுமென்று திருவுள்ளமாயத் திருக்கோனேரிக்குக கீழ்க் கரையாகத் தக்ஷிணேத்தரமாக ஒரு குரோசமாத்ரம் ஒரு திருவீதியையும் கல்பித்து, அதிலே சில கைங்கர்ய பரரையும நித்யவாசமாகவிருக்கும் படி கட்டளை பணணி, உத்ஸவ காலங் கள் வந்தவாறே அந்தத்திருவீதியிலே உத்தராபி முகமாய்ப் (வடக்கு முகமாய்) புறப்பட்டருளித் திரும்பி, தக்ஷிண (விஜய) மாய எழுந்தருளும் படி கடடளை பணணி வைப்பட்டது.

(தொடரும்)

---

ஏ அன்பனே!

புல்லைத் தினபதும், தழையையுண் பதும், வேப்பிலையை யுண்பதும், குகையில் வசிப்பதும், நீருக்குள் இருப்பதும், வானில் ப ற ப் ப து ம் சிறப்பு ஆகாது.

புல்லை யுண்பவனையும், தழையை யுண்பவனையும், வேப்பிலையையுண் பவனையும், குகையிலேயே வசிப்பவனையும், நீருக்குள் முழுகியிருப்பவனையும், வானில் பறப்பவனையும் ஞானி என்று எண்ணுதே.

மாடு புல்லையே உண்ணுகின்றது;
ஆடு தழையையே உண்ணுகின்றது;
ஒட்டகம வேப்பிலையையே உண்ணுகின்றது;

விலங்குகள் குகையிலும், பெருச் சாளியும் நண்டும் வ ளை க ளு ள் ளு ம் வசிக்கின்றன. பறவைகள் வானில் பறக்கின்றன. இவைகள் ஞானிகள் ஆகா.

தன்னை யுணர்ந்து, தன் தலைவனை மெய்யுணர்வினுல் உணர்ந்து தானற் றவர்களே ஞானிகள் என வுணர்க.

*கிருபானந்தவாரியார்-மணிமொழிகள்.*

---

தொடர் கட்டுரை :

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. டி. ஜி. அனநத சுபரமணயம,
(காபே ய ன)
திருப்பதி.

மோதிரம் எனபது எப பொழுதும் அணியக் கூடியதல்ல. இராமன் முனிவேஷம் பூண்டுதான் போக வேணடுமென்று கைகேயி கேட்டாளேயொழிய ஸநயாஸியாக ஸாவஸங்க பரிதயாகம் செயது விடடு போக வேணடுமென்று வரம கேட்கவில்லை. நிற்க. இராமன் காட்டிற்குப் புறப்படும்போது சீதா பிராட்டியும் புறப்பட்டதை கைகேயி அறிவாள். அப்பொழுது சீதா பிராடடியைத் தடுக்கவில்லை. மேலும் இநத மோதிரம் இராமனின பெயர் எழுதியது. ஆகையால் இம்மோதிரம் சீதாபிராட்டியின் கையில் தான் இருநதிருக்க வேண்டும். ஏதோகாரணத்தால் இராமனின் விரலுக்கு மாறிவிட்டிருககிறது. இதுவே இராமனிடம மோதிரம் இருந்தற்குக் குக காரணமாகும். சீதாபிராட்டி மோதிரததைப் பெற்றுக்கொணவுடன்,

गृहीत्वा प्रेक्षमाणा सा भर्तुः करविभूषणम् ॥

கூறுகிறுள். 'இம்மோதிரம் என கணவரின் விரலுக்கு வெகு அழகாக இருநதது'' எனறு. ஆகையால் சீதாபிராட்டி தன் கையில் இருந்ததைவிட இராமன் கையில் அதிகமாக பிரகாசித்தது என்று கூறுவதால், மோதிரம் சீதாபிராட்டியைச் சேர்நதது என்பது தெரியலாகும்.

அத்யாத்ம ராமாயணம் கீழ்வருமாறு கூறுகிறது.

आभिज्ञानार्थमेतन्मे ह्यंगुलीयकमुत्तमम् ।
मन्नामाक्षरसंयुक्तं सीतायै दीयतां रह ॥
अङ्गुलीयकमेतन्मे परिज्ञानार्थमुत्तमम् ।
सीतायै दीमतां साधु मन्नामाक्षरमुद्रितम् ॥

அதாவது, "இந்த மோதிரம எனனுடைய ஞாபகார்த்தமாக சீதா பிராட்டியிடம் கொடுக்கவும்'' என்று.

ततो रामो मुद्रिकां स्वां ददौ मारुतिसत्करे ।
तां राममुद्रिकां दृष्टवा नत्त्वा मामब्रवीत्
कपिम् ॥

என்று ஆனநதராமாயண சுந்தர காண்டத்திலும்,

अपश्यन्मुद्रिकां रम्यां रामनामाङ्कितां शुभाम् ।
तदातिचकिता सीता ज्ञात्वा तां राममुद्रिकाम्।

என்று வாசிஷ்ட இராமாயணத்திலும்

अयं मैथिल्यभिज्ञानं काकुत्स्थस्याङ्गुलीयकम्।
भवत्याः स्मरतात्यर्थं अर्पितः सादरं मया ॥

என்று பட்டி காவயத்திலும

या शैशवावधि मनोरमरामचन्द्र हस्ताङ्गुली
प्रणयिनी सुभगा सुवृत्या ।
अन्येव सा जनकराजसुता कथं नु लंकामुपा-
गतवती मणिमुद्रिकेयम् ॥

எனறு பிரஸன்ன ராகவ நாடகத்திலும்,

किमिदं हस्ते ! तन्मुद्रिका - दत्ता तेन तवैष
तां निजकरात् ।

என்று ஹநுமன் நாடகத்திலும் கூறப் பட்டுள்ளன.

இமமாதிரியாகப் பல நூல்களில் மோதிரத்தைப் பற்றிக் கூறப்படுகிறது. துளசிதாஸரின் இராமாயணத்தில் மோதிரத்தை சீதா பிராட்டி பெற்றுக் கொண்டு, இராமனுடைய குணகணங்களைக கூறு என்று ஹநுமானிடம் கேட்டதாக இருககிறது.

सीता मन विचार क र नाना ।
मधुरवचन् बोले उ हनुमाना ॥
रामचन्द्र गुन वरनै लागा ।
सुनत हि सीताकर दुख भागा ॥ எனறு

வால்மீகியில், முதலில தனனை அறிமுகம படுத்திக கொளளும போதே இராமனின் கதையிலிருநது தான தொடங்குகிறுர் ஹநுமான் எனறு இருக்கிறது. இராமனின் சரித்திரத்தைச சொன்ன பிறகுதான் சீதாபிராட்டி நம்புகிறுள். அநத நம்பிக்கையை மேலும் தருடமாகக அங்குளீயத்தைக் கொடுககிறுர்.

भूय एव महातेजाः हनुमान् मारुतात्मजः ।
अब्रवीत् प्रश्रितं वाक्य सीताप्रत्ययकारणात् ॥
वानरोऽहं महाभावो दूतो रामस्त्र धीमतः ।
रामनामाङ्कितं चेदं पश्य देव्यङ्गुलीयकम् ॥

என்று வால்மீகியில் இருக்கிறது.

கம்பராமாயணததிலும முதலில் இராமனின அழகைக கூறிய பிறகு கணையாழியைக் கொடுத்தாகக் காணபபடுகிறது. அத்யாத்ம ராமாயணததிலும் வால்மீகியைப் பின் பற்றியே சுாணப்படுகிறது. வால்மீகததில் இராமனின கதையைச் சுருககமாகச சொனனவுடன் சீதா பிராட்டி ஹநுமானைப் பார்த்து ''தான பார்பபது கேட்பதெல்லாம் ஸ்வப்னமோ? கனவில் குரஙகைப் பார்க்கக்கூடாது என்பார்களே'' என்று பலவிதமாகச் சந்தேகம் அடைநது தேவாகளைப பிரார்த்திக்கிறுள். அப்பொழுது ஹநுமான் கீழே இறங்கி வநது சீதாபிராட்டியைக் குறிததுப் பல கேள்விகள் கேடகிறுர்.

कानु पद्मपलाशाक्षि क्लिष्टकौशेय वासिनि ।
द्रुमस्य शाखामालम्ब्य तिष्ठसि त्वमनिन्दिते॥
किमर्थं तव नेत्राभ्यां वारि स्रवति शोकजम् ।
यथा हि तव वै दैन्यं रूपं चाप्यति मानुषम् ।
तपसा चान्वितो वेषः त्वं राममहिषी ध्रुवम्॥

"தேவி! தாங்கள் யாா? பூமியில் இத்தகையபெண்ணைப்பார்த்ததில்லை. 'நீஙகள்தேவலோகமோ கந்தர்வலோகமோ! ஆனுல்தாங்கள் ஓர் அரசனின் பட்ட மகிஷியைபோல காணப்படுகிறீர்களா. தாஙகள்துக்கப்படுவதறகுக் காரணமஎனன?தஙகளைப்பார்த்தால் மனித வர்க்கத்தை காட்டிலும மேனபடடவளா போல் தெரிகிறதே! மேலும் தஙகளா வேஷத்தைப் பாாத்தால் இராமனின மனைவியாகத் தெரிகிறதே!'' எனறு கேட்கிறுா. இதைக் கேட்ட சீதாபிராட்டி,

सोता च नाम नाम्नाहं भार्यारामस्य धीमतः
वसतो दण्डकारण्ये तस्याहममितौजसः ।
रक्षसापहृता भार्या रावणेन दुरात्मना ॥

"என் பெயர் சீதை. தீரனுன இராமனின் மனைவி'' என்று ஆரம்பிதது நடந்த விருத்தாநதத்தைக் கூறுகிறுர்.

(தொடரும)

# சிறையிருந்த செல்வி

திரு. என. கிருபானந்தன்,
M A., BSc, Jr Dip-i-Ling,
திருப்பதி.

இதுகாறும் சிறையிருநத செலவி யான சீதை ஒரு கற்புச செல்வி என்று ஆராய்ந்து உணர்நத நாம இனி அவளை ஓர் 'அறிவுச் செலவி' என்ற கோணத்தில ஆராய முறபடு வோம்.

அறிவில சிறந்த சீதையின அறி வாற்றல நன்குவெளிப்படும நிகழ்ச்சி களில் சிலவற்றை மட்டும் இங்குப் பார்ப்போம்.

அளவுடன பேசுதல் கற்பு மாந் தரது பணபு. 'சிலப்பதிகார'க் கண்ணகியைப் போலவே 'கமபராமா யண'ச சீதையும் அளவுடன் பேசு கிறாள. அவள் பேசும் ஒவ்வொரு சொல்லும் பயன் மிக்கவை. பயனற்ற சொல்லை அவள் பேசுவதே யில்லை. பேசும் பேச்சிலும் பயனுள்ள சொற்களையே பேசுதல் அறிவுடையோரது தனமை. இதனையே திருவள்ளுவரும்

'' அருமபய னுயும அறிவினார சொலலார்
பெருமபய னிலலாத சொல''

(திருக்குறள், 198)

எனபார. சிறநத சொல்லாற்றலி லும, ஆராயந்து எடுதத தக்க பயனுள்ள பேச்சைப பேசுவதிலும் சீதை சிறநதவள. இதனை ஒரு நிகழச்சி மூலம நன்கு உணரலாம

கானகம செல்ல மரவுரி தரிதத வனாக இராமன் சீதையிருக்குமிடம நாடி வருகிறான. சீதையை எவ வாறாவது அயோததியிலதஙகியிருககு மாறு செயதுவிட வேணடும என்ற எணணததுடன வரும இராமன சீதையிடம்,

'' பொருவில் மெமபி புவிபுரப பானபுகழ்
இருவ ராணையு மேந்தினெ னின்றுப் போய்க்
கருவி மாமழைக கறகடங கணடுநான
வருவெ னீணடு வருநதல்
நீயெனறான''

(அயோத். நகாநீஙகுப் படலம, 223)

அதாவது, 'சீதை! ஒப்பறற என் தமபி பரதன் பூமியைக காப்பான். நான் புகழ்வதற்கு உரிய இருமுது குரவரது ஆணையைத் தாங்கியவனாகி இனறுபோய மேகம் தங்கும் வனத் தைக் கணடு இங்கு வருவேன். நீ வருததமடையாது இங்கு இருப்பா யாக.' எனறு கூறுகிறான். ஆனால கற்புச் செல்வியான சீதையோ தானும் இராமனுடன் கானகம் புகவே துணிகிறாள். இராமன் சீதை யின் எணணத்தைஉணாந்து அவளைத் தடுக்கச சில காரணங்களைக கூறினும் அவற்றை, உரிய பயனுள பதில் களால் இராமன் மறுகக இயலாத வாறு செய்து விடுகிறாள் சொல்லின் செல்வி. முதலில் இராமன்,

'' அல்ல ரககினுருக்கழல் காட்டயற
கல்ல ரக்குங் கடுமைய வல்ல நின்
சில்ல ரக்குணட சேவடிப் போதென்
றான''

(அயோத். நகர்நீங்குப படலம், 227)

அதாவது 'உன குளிர்நத செம்பஞ்சி யூட்டிய சிவந்த அடித தாமரைகள் அரக்கின உருககுப போல வெப்பஞ் செய்கின்ற காட்டு வழியிலுளள கற்கள் தைத்தலைத் தாங்கற்கு உரிய கடுமையானவை அல்ல, அக் கறகள் உன காலைச்சுடும' என்றுகூறி மறுககும இராமனைப பார்த்து நீர் நிறைநத கணகளையுடைய சொல்லின் செலவியான சீதை, ''உன பிரிவுத் துனபம என உளளத்தைச் சுடுவதை விட அநதக கானகததுக் கற்கள் என காலை அதிகமாகச சுட்டுவிடு மோ?'' என்று சுருக்கமாக, அதே சமயம் இராமனும் மறுக்க இயலாத வாறு பதில் கூறுகிறாள். வானமீக ரோ தனது இராமயணததில் இராம னும சீதையும வெகுநேரம் பல வகையாக வாதிட்டுக்கொணடதாகப் பல பாடல்களில் கூறிச செல்வார். ஆனால் கம்பரோ சீதையின அறிவை உணாநதவா, உணர்த்த விரும்பு பவா. சுருககமாக முடித்து விடுவாா இக்காட்சியைக் கமபர்.

சீதையின் பதிலைக் கேட்டு, அவளது மனஉறுதியைக கணடு என்ன செய்வது எனறு தெரியாமல் திகைதது நினறுவிடுகிறான் இராமன். சீதையோ ஒரு விநாடியும் தாமதித் தாள் இலலை 'அகல்மனை' எய்தி மரவுரியைத் தரித்துக் கொண்டு வேக மாக வநது இராமனது கையைப் பற்றிக் கொள்கிறாள் சீதை. எங்கே சற்று தாமதித்தாலும இராமன வேறு ஏதாவது காரணம் கூறி மறுப் பானோ என்ற எண்ணத்தாலோ என்னவோ, சீதை அதறகு இடந் தராது மரவுரி தரித்துப் புறப்படத் தயாராகி விடுகிறாள். இவ்வளவு நடநத பிறகு மறுத்துப் பேச இராம னால எவ்வாறு இயலும்?

எனினும இராமன் ஒருவாறு சமா ளித்துக்கொண்டு ''நீ விளைவறியாது என் உடன்வர உடனபட்டாய். அதனால எனககுப் பெருந்துயரம் விளையும்'' என்று சீதையிடம் கூறு கிறான். அது கேடட சீதை, ''என்னை இங்கு விடடுச் சென்ற பிறகுதான் உமககுக்காட்டில்இன்பம்உண்டாகும் போலும்'' எனறு கூறி ஓர் இக்கட் டான நிலையில இராமனை வைத்து விடுகிறாள். இதறகு இராமன் எனன பதில்தான் கூற முடியும்? ஆகவே பேசாமல் சீதையைத தன்னுடன் கானகத்திற்கு அழைத்துச் செல்ல ஒப்புக் கொள்கிறான் இராமன். ஆக, என்ன பேசினால், எனன செய்தால இராமனால் தன்னைத் தன்னுடன் கானகம் புகத் தடுக்க முடியாதோ அதை விநாடியில் பேசிவிடுகிறாள்; செயது விடுகிறாள் அறிவுச் செல்வி. இஙகுச் சீதையின அறிவுத் திண்மை யை நன்கு உணரலாம்.

இராமனுடைய அறிவுக்கு எவ விதத்திலும் குறைந்த தன்று, சீதை யின அறிவு. இதனை ஒரு சிறு நிகழ்சசியால் நாம் அறியலாம். கோதாவரி ஆற்றின வளததை இராமனும சீதையும் கணடுகளித்துக் கொணடிருககும் போது அங்கு ஓர் அனனப் பறவை ஒதுங்கி நடக்கிறது. அதனைக் கண்ட இராமன் சீதையின் நடையைக் கண்டு சிறியதோர் முறுவல் செய்தான். சற்று தூரத்தில் நீருணடு மீளும் ஓர் ஆண யானையின் நடையைக் காணுறும் சீதை, அருகில் உளள இராமனின் நடையைப் பார்த்து ஒரு முறுவல் பூக்கிறாள். இதனையே கமபன்,

''ஓதிம மொதுங்கக கண்ட வுத்தம
னுழைய ளாகும்

சீதை தனனடையை நோககிச் சிறிய
தோர் முறுவல்-செய்தான்
மாதவ டானு மாண்டு வந்துநீ ருண்டு
மீளும
போதக நடபப நோக்கிப புதியதோா
முறுவல் பூத்தாள்''
(அரணிய-சூர்ப்பனகைப்
படலம்-5)

என்று அழகாக வருணிப்பான். இராமனது புன்னகையின் ஊடே மறைந்து கிடககும் அவனது உளளக கிடககையைப புரிந்து கொணடு, புதியதிதார் முறுவல் மூலமே தன் உள்ளக்கிடக்கையை இராமனுக்குப் புரிய வைககிருள் அறிவுச் செல்வி.

அடுத்து;

தனித்துத தங்கி இருக்கும் சீதையினை நாடித் துறவி வேடத்தில் இராவணன் வருகிறன. அவனைக கணட சீதை அவனிடம் கேட்கும் கேள்விகளாலும், அவனது கேள்விகளுககுக் கூறும பதில்களாலும கூட நாம் நுண்ணியதாகச் சீதையின் அறிவை உணரலாம. இராவணனின் (தன்) வலிமைக்கு முன இராமனது வலிமை வாடைக் காற்றில் சிக்கிய பூளைப பூப் போன்றது என இகழும் இராவண சனனியாசியிடம் சீதை,

''அரண்டரு திரடோள் சால வுளவெனி
ஞற்ற லுண்டோ
கரணடநீ ரிலங்கை வேநதைச சிறை
வைத்த கழறகால வீரன
திரணடதோள வனததை யெலலாஞ்
சிறியதோர் பருவநதனனில
இரண்டுதோ ளொருவ னன்றே மழு
விஞ லெறிந்தா னெனருள
(ஆரணிய-சடாயு உயிர்
நீத்த படலம்-63).

என்று தகக விடை கூறுகிருள். அதாவது 'இருபது தோளுடையான என்ற மாத்திரத்திஞல் இரணடு தோள்களையுடைய இராமபிரானைக் காடடிலும் இராவணன வலிமையுடைவஞகான். இராவணனது அவ்விருபது தோள்களையும் பிடித்துக் கட்டி அவனைச் சிறையிலிட்டான கார்த்த வீரியார்சுனன். அநதக் கார்த்த வீரியனது ஆயிரந் தோள்களையும் கோடாலியிஞல வெட்டித தளளிய பரசுராமன் இரண்டு தோள்களையுடையவனே அன்ருே'' என்று சீதை தகக முன் நிகழ்சசியைத் தக்க இடத்தில் எடுத்து உதாரணமாகக காட்டி இராமனது வலிமை இராவணன் வலிமைக்கு எவவிதத்திலும் குறைநத தன்று எனறு உணாத்த முயலுகிருள். இது போனற பதில்கள அவளது அறிவுச்செலவத்தை நமககு நனகு எடுத்துக் காட்டுகின்றன.

தன்னை இராவணன் தூககிச செல்வதை இராமனுககு எவ்வாறு தெரிய வைபபாள் சீதை? சடாயு இராமனிடம நடந்ததை எடுததுச சொல்லுவார் என்று எதிர்ப்பார்கக முடியாத நிலை. ஏனெனில் இராவணனது வாளின கொடுமையிஞல் குற்றுயிரும் குலையுயிருமாகக குலைககபபடட சடாயு இராமனைச சந்திககும வரை உயிருடன இருப்பாா என்பது எனன நிசசயம? ஆகவே தனது நிலையை இராமனுக்கு உணர்த்த விரும்பும சீதை வேறு வழியில்லாத நிலையில் அறிவு நிலையில் நின்று தனது அணிகலன்களை யெல்லாம (சூளாமணியைத் தவிர) கழறறி மூட்டையாகக் கட்டி வானர வேநதன் சுக்கிரீவன் முன் போடுகிருள. தன்னை இராவணன் தூககிச்செல்வதைச் சுக்கிரீவன் முதலாஞோா பார்க்கும்படியாக அவர்கள் கருத்தைக் கவரும் வகையில் அவாகள் முன் அணிகலன்களின் மூட்டையைப் போடுகிருள் சீதை. பினனர் இராமன் தனனைத் தேடி அலைந்து அத்திசையில் வர நேரிட்டால் அவ்வானரங்களின் கையில் சிக்கியுளள தன் ஆபரணஙகளைக் கணடு தன்னைப பற்றி அவ்வானரங்களைக கேட்டுத் தான இராவணஞல கவரப்பட்டதை அறியககூடும் எனறு எண்ணிஞள் போலும்! அனைத்து அணிகலனகளைக கீழே மூட்டையாகக கட்டிப போடடாலும் சூளாமணியை மட்டும் தன் புடவையின் தலைப்பில் முடிபோட்டு வைத்துக கொள்கிருள் சீதை. பின்னா அது பயன்படக கூடும் எனறு எணணம் கொணடாள் போலும்! ஆகவே இங்கும் நாம் சீதையின் அறிவை-முனனெசசரிககையை-உணருகிரேம்.

(தொடரும்)

# அறிவிப்பு

திருமலையில் காட்டேஜுகளுக்காக முன்பணம செலுத்தி, தனி ஒதுககீடு (Reservation) செய்து கொள்ளும் யாத்திரிகர்களின் நன்மைக்காக, மேலாணமை கீழ்வரும சலுகைகளை அளித்துள்ளது.

1. காட்டேஜுகளுக்காக தனி ஒதுக்கீடு செயது கொணட தேதிகளுக்குள் சம்பந்தப்பட்ட யாத்திரிகர்கள் நாட்கழித்து வநதாலும், மீதம் இருககும நாட்களுககு, அவாகள் கணக்கில, வராத நாட்களுககுரிய கட்டணத்தைப் பிடித்துக் கொண்டு, மீதித் தொகைக்கு அவர்களுக்கு இட வசதி அளிக்கப்படும்.

2. காட்டேஜுகளுக்காக முன் பணம் அனுப்பியவர்கள், தாங்கள் கோரியபடி தங்கள் பெயரில் ஒதுக்கீடு செய்யப்பட்ட நாட்களை, சூழ்நிலைக் காரணமாக மாற்றிக் கொளள நினைததால், அவர்கள் இரண்டு நாட்களுக்கு முன்பேயே, (அதாவது ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு முன் இரண்டு நாட்கள்) இது சம்பநதமாக விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

3. காட்டேஜுகளுக்காக முன் பணம செலுத்தியவர்கள் தங்களுககு வழங்கப்பட்ட தனி ஒதுக்கீடு தேதிகளில் வர இயலாது, செலுத்திய தொகையைத திருப்பிப் பெற வேண்டுபவர்கள், தங்கள் எணணததை, ஒதுககீடு செய்யப்பட்ட தேதிககு இரணடு நாட்களுக்கு முன்பேயே விணணப்பம ஒனறன மூலமாக தெரிவித்தல் வேணடும்.

செயலாட்சித் தலைவா,
தி. தி. தேவஸதானம, திருப்பதி.

# வேங்கடத்துச் செங்கண்மால் சேவடிக்கு.... விண்ணப்பம்

'தூதென்பது ஒருவர் தம்முடைய கருத்தை வேறொருவருக்கு இடை நின்ற ஒருவர் வாயிலாகக் கூறி விடுப்பது'. தலைவனைப் பிரிந்த காம மயக்கத்தால் தலைவி அஃறிணைப் பொருளையும், உயர்திணைப் பொருளையும் தூது விடுப்பதாகச் செய்தல் கவிமரபு. தமிழ் இலக்கியத்தில், தொண்ணூறு வகைப் பிரபந்தங்கள் உள்ளன வென்று சொல்வார்கள். தத்தம் கற்பனைத்திறத்திற்கு எந்தெந்த பொருட்களை ஏற்றதென கருதுகிறார்களோ, அந்தந்தப் பொருளை தூது விடுத்ததாகப் புலவர்கள் பிரபந்தங்களை இயற்றிருக்கிறார்கள். பல பொருட்களைத் தூதாக கொண்ட செய்யுட்களை முற்காலத்து நூல்களிலும் பிற்காலத்து நூல்களிலும் காணலாம்.

அகநானூற்றில்;

"கானங்கழுது" (170) என்னும செய்யுளில் ஒரு தலைவி நண்டைத தூது விட்ட செயதியும்,

ஐங்குறு நூறறில்,

"சூழ்கம வமமோ" (317) என்னும செய்யுளில நெஞ்சைத் தூது விட்ட செய்தியும்,

பரிபாடலில் "தூதேய வண்டின் தொழுதி" என்று வண்டைத் தூது விட்ட மரபையும்,

நற்றிணையில்,

"சிறு வெள்ளாங் குருகே" (70)

என்று வெள்ளாங் குருகை தூது விடுவதையும் காண்கிறோம்.

திவ்விய பிரபந்தம், தேவாரம், முதலிய பலவகைப் பிரபந்தங்களிலும் பல செய்யுட்கள் தூதாக அமைந்துள்ளன.

தூது அனுப்புவதற்கு தேர்ந்தெடுக்கும் பொருள், இவை இவையென்று வரையறையில்லையெனினும், அன்னம், மயில், கிள்ளை, மேகம, நாகண வாய்ப்புள், பாங்கி, குயில், நெஞ்சு, தென்றல், வணடு என்னும் பத்துப் பொருட்களை தூது விடுதற்குரிய பொருளாக புலவாகள் தோந்தெடுத்திருககின்றனா. இப்பத்தையும் அல்லாத வேறு பல பொருட்களையும தூது விட்டதாக அமைந்த நூல்களும் உணடு. ஒருவரைப் புகழந்து பாடுவதற்குத் தூதுப் பிரபந்தங்களைப் புலவர்கள் பயனபடுத்துவதைப்போல், இகழ்ந்து பாடுவதற்கு இப்பிரபந்தம் ஒரு கருவியானதுண்டு. தூதுப் பிரபந்தங்கள் கலிவெணபாவால் செய்யப் படவேண்டுமென்பது இலக்கணம்.



நாலாயிர திவ்விய பிரபநதத்தில, வெஙகடேசப் பெருமாளின் திவ்ய நாமங்களையும், கருணை உள்ளத்தின் விசேஷங்களையும் கூறி, ஏழுமலையானின் திருவடிகளை சரணடையும்முகத்தான், சீனிவாசப் பெருமாளிடம் மேகத்தை தூதாக அனுப்பும் பத்துப் பாடல்களை திவ்யபிரபந்தம்—முதலாயிரம்—நாச்சியார் திருமொழி—8—ந் திருமொழியில் காணகிறோம்.

மேகத்தைத் தூது விட்டால் குறையுணடென்று குழந்தைக் கவிராயர்,

"..... மெத்தலே
மேகங்கடுங் குரலாய்
விள்ளுமல்லானின் போலப்
பாக முடனின சொற் பகராதே" (61)

(மான் விடு தூது)

மலபட்டடை சொக்க நாதபிள்ளை;

"... மாதரையெல்லாற் தூற்றும்
கொண்டலேயுந் தூது விடக் கூடுமோ"
(201)

(அழகர் கிளளை விடு தூது)

கு. நடேச கவுணடர்

"..... செனறுவர
மேகத்தைத் தூண்டலெனில
வெய்ய விடிக்குரலும்
ஆகக் கறுப்பும் வாயங் காந்தால் .. "

(மயில் விடுதூது-அருளமிகு தண்டாயுதபானி சுவாமி தேவஸ்தான வெளியீடு)

ஆகியோர் பாடல்களினுல்அறியலாம்.

பெருமானின் கருணையின் வடிவாய், உலகெலாம் காத்து ரட்சிப்பது மேக மாதலின், கொணடலே எம்பெருமானின் திருவுருவாயும் இருக்கிற படியாலே வேங்கடமுடையானிடம் தூது செல்வதறகு, திவ்ய பிரபந்தத்தில், முதலாயிரம-அ-8-ந் திருமொழியில், மேகத்தைத் தேர்நதெடுத்தனுப்புவது பொருத்தமாகிறது.


**திரு. எம். மாரிமுத்து,**
B.A.B., Com. ,H D.C.,


பெணமையில் நளினமும், இளகிய மனதின் நெக்குருகிப்படும் தன்மையும், கண்ணீர் மல்கி கசிந்துருகி வேங்கடப்பதியானுக்கு கொணடலின் மூலமாக விடுக்கும் விண்ணப்பம் தெவிட்டாத பக்தி அமுதமாகும்.

"விணணில் மேலாப்பு விரித்தால் போல்" எவ்வளவு சிங்காரமாக காட்சியளிக்கிறீர்களென்று மேகத்தை முதலடியில் வசப்படுத்துவதாவது, மேகத்தினிடத்தே மங்கையானவள் கெஞ்சினுல்தால், தன் காரியம் சித்திக்குமென்ற சாதுரியம் விளங்குகிறது. எம்பெருமான் சீவ ராசிகளைக் காத்து ரட்சிக்க கருணை

மழை பொழிவதே போல, முகில்களாகிய நீங்களும் ''மாமுத்த நிதி சொரியும்'' பேரு உள்ளவர்களாவீர் களென்று இரண்டாம் பாட்டின் முதலடியில், கொண்டலும், கொண்டல் வண்ணனேயென்று சொல்லி வைக்கும நயம் உணரபபாலது.

காமத்தீயில் பட்ட என் மேனியைத் தென்றலும் வந்து வநது தீண்டிக் கொணடிருககிற கொடுமையினை பெண்மைக்கே உரிய நளினத்தோடு சொல்லாமல் சொல்லி,

*''காமத்தீயுள் புகுந்து கதுவப்பட்*
*டிடைக்கங்குல்*
*ஏமத்தோர் தென்றலுக்கிங் இலக்காய்*
*நானிருப்பேனே!''*

என்றும், கற்புத்திறம வெளிப்பட, நெஞ்சைத்தொட்டுவிட்ட கார்முகில வணணனுக்காக, ''ஆவிகாத்திருப் பேனே!'' என்று தன உள்ளத்தின் வேதனையை வெளியிட்டு, அந்த வேதனை தணிய வேண்டி, வேங்கடப் பதியானிடம் தன் காதலை வெளிப் படையாகவே கண்ணீர் மல்கி கசிந் துருகிச் சொல்வதும்;

*" சங்கமா கடல் கடைந்தான் தண்*
*முகில்காள்!-வேங்கடத்துச்*
*செங்கண்மால் சேவடிக் கீழடி வீழ்ச்சி*
*விண்ணப்பம்*
*கொங்கைமேல் குங்குமத்தின் குழம்*
*பழியப் புகுந்து-ஒருநாள்*
*தங்குமே லென்ஞவி தங்குமென்*
*றுரையீரே".*

ஊடலின்றிக் காதல் இனிக்காதென்ற இங்கிதமும் காட்டி, திருமால் தனககே உரியவெனென்ற தருக்கையும் காட்டி, வராதிருப்பானேல், பெணசாபம் பொல்லாததென்று கடிந்து கொள்வதையும்,

*" மதயானை போலெழுந்த மாமுகில்*
*காள்-வேங்கடத்தைப்*
*பதியாக வாழ்வீர்காள்! பாமபணை*
*யான் வார்த்தையென்னே!*
*கதியென்றுந் தானவான் கருதாது-*
*ஓர் பெண் கொடியை*
*வதை செய்தானென்னுஞ் சொல்*
*வையகத்தார் மதியாரே!"*

தூது செல்லும் மஞ்ஞையிடம் வேங் கடமுடையானின் பெருமைகளையும், திருஅவதார மகிமைகளையும் எடுத் துரைக்கச செய்து இப்பெரியாரிடம் தூது செல்லப்பணித்துள்ள இங்கித மும காட்டி அனுப்புகிற பாவனை நுட்பமும் உணரப்பாலன.

குடைபிடித்த ''கோவிந்தன்'', ''திருமங்கை தங்கிய சீர்'', உடைவ ரென்றும், ''ஊன கொண்டவள் ளுகிராலிரணியனை யுட விடந்தான'' வரலாறும், ''மாவலியை நிலங் கொண்ட'' செய்தியும், 'உலகுண்ட' சேதியும்,''சங்கமா கடல் கடைந்த'' வணணமும், ''பாமபணையா''னென வும், பெருமானின் பெருமைகளை தூதில வெளிப்படுத்துகிறர். இளமை உள்ளததின் இன்ப நீரோட்டக்கதி யினை பததுபபாககளிலும் நிரவல் செயவதனையும் ஆராயலாம்.

தூது செல்ல மேகத்தை தோந் தெடுத்து, வேங்கடாஜலபதியின் திரு நாமங்களை இனிய தமிழில வந்தனை செய்து, அவன் திருவடிகளை பத்துப் பாட்டிலும், பக்தி நனி சொட்டப் பாடியிருப்பதைக் கணடு பரவசம் அடையலாம்.



# துறவியலின் மேம்பாடு

உயா குணங்கள் நிரம்பப்பெற்ற ஓா ஆணும் பெண்ணும் கருத்தொரு மித்து இணைந்து கடிமணம புரிந்து இல்வாழ்கை நடத்தினா.

சிறிது காலம சென்றபிறகு இருவருக்கும் துறவறம் மேற்கொண்டு தெய்வத் தொண்டு செய்து நற்கதி அடையவேணடுமென்ற அவா தோன்றியது.

ஒரு சிறநத துறவியை அடைந்து அவரிடம் தாங்கள் இதுவரை வள்ளுவர் உரைத்த குறளின்படி இல்வாழ்க்கை நடத்தியுள்ளோம். மேலும் இல்வாழ்க்கையின் மீது நாட்டம் குறைந்து, துறவறததின் மீது பற்றுற்று நற்கதிக்கு வழிகோலும் துறவறத்தை உபதேசிக்கக் கோரினர்.

அத்துறவியும் அவர்களுக்கு துறவறத்தை உபதேசித்து, 'இனி நீங்கள் துறவறத்திலும் கூட ஒருங்கிணைநது செயல்பட்டு இறையருளை வேணடித் தொண்டு செய்வீர்களாக' என வாழ்த்தியருளினர்.

அவ்விரு ஆண துறவியும பெண துறவியும பல ஊாகள் சென்றும், பல நூல்கள் பயின்றும், பல நல்ல அருந்தொண்டுகள் செய்து, பற்றற்ற தன்மையில் இறைவன் மீது நாட்டம் கொண்டு, பல திருத்தலங்கள் சென்று அடியாாகளைக் கண்டு வணங்கி, தங்களது துறவறத்தின் பயனை அடைநது வருங்கால, கன்யா குமரி என்னும் திருததலந் தன்னில் அவர்கள் தங்க நேர்நதது.

குமரி அன்னையை வணங்கிவிட்டு ஆண்துறவியாா முன்செல்ல பெண் துறவியார் ஆர்ப்பரிககும் குமரிக கடலின் ஒசையில், அதன், பரப்பளவில் இறையின் மஹிமையை எணணி வியந்த வணணம முன்செல்லும் ஆண துறவியாரை பின்பற்றி நடநது கொணடிருந்தார்.

முன்னல் நடநது செல்லும ஆண துறவியாரின் கணணில் கடற்கரை மணலில் யாரோ தவறவிட்டுச்சென்ற வைர வளையல் ஒன்று தெரிந்தது.

அதைக் கணட ஆண துறவியார் பின்னல் சற்று தூரத்தில் வரும் பெண் துறவியாரின் கண்ணில அந்த வைர வளையல் பட்டுவிடாதிருக்க நடந்து செல்லும்போதே காலால் சிறிது மணலை அதன்மீது தள்ளி மூடிவிட்டு முன் நடந்தார்.

பின்னல் வந்துகொண்டிருந்த பெண் துறவியார், யதேச்சையாக இச்செயகையைக கணடு ஆண்துறவியிடம் 'அடிகளே! தாங்கள்எதையோ காலால் மூட முனைந்தீாகளே' என விளக்கம கேட்க அவரும் தாம் வரும் வழியில் மணலில் யாரோ தவற விட்டுச்சென்ற வைர வளையலைக் கணடதைககூறி 'பினனல் வரும் நீங்கள் இதைக கணடால், இயற்கையிலேயே நகை, ஆபரணம் இவறறின மீது கணடவுடன் ஆசை தோன்றும் பெண் இன இயல்பில் அந்த நகையின் மீது தாங்கள் நாட்டம் கொணடு, அதனல் நொடியேனும் தஙகளது துறவறத்திற்கு குறைவரக் கூடா3த என்று நான் காலால் மண்ணைப் போட்டு அதை மூடினேன்'' என்று கூறினா.

அதற்கு அந்தப் பெண் துறவி! 'அடிகளே! துறவறத்தின் மேம்பாட்டுப் படி துறவிக்கு பற்றற்ற தன்மை வந்தபிறகு வைரம் வேறு கூழாங்கல் வேறு எனற பாகுபாடு தோன்றலாமா? அப்படி உங்கள் கண்களுக்கு வைரமாக தோன்றியது எனக்கு கூழாங்கல்லாகத்தான் தோற்றமளித்தது. இநநிலை தாங்கள் இன்னும் பற்றற்ற தன்மைக்கு வந்து பக்குவமடைய வேண்டும் என்பதை உணர்த்துகிறது. ஆதலின் நாமிருவரும் இனி தனித்தியங்குவோம்' என அப்பெண் துறவியார் பிரிந்து சென்றூர்.

**எஸ். சந்திரமௌலி**
திருப்பதி.



## அறிவிப்பு

**சநதாதாரர்கள் தங்களுடைய சநதாத் தொகையினை ஒவ்வொரு மாததநின் 15ஆம் தேதிக்குள் 'மார்க்கெடிங ஆபீஸர், பப்ளிகேஷன் செக்ஷன், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருபபதி' என்ற முகவரிக்கு அனுபபுதல் வேண்டும். அப்போதுதான் அவர்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து 'ஸப்தகிரி' பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப ஏதுவாக இருககும. இருப்பில் பிரதிகள இருப்பின் அம்மாதத்திலிருநது (பணம் அனுப்பும மாதத்திலிருந்து) ஸப்தகிரி பத்திரிகைகள் அனுப்பி வைக்கபபடும். எம. ஒ. கூப்பனில் புதிய சந்தாதாரர்கள் எந்த மாதத்திலிருந்து பத்திரிகை வேணடும் என்பதைத் தெளிவாக எழுதுதல் வேண்டும். தொடர்ந்து தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும் சந்தாதாரர்கள மறக்காமல் எம். ஒ. கூப்பனில் தங்கள் சநதா எண்களை குறித்தல் வேண்டும். ஸப்தகிரி மற்றும் தேவஸ்தான வெளியீடுகளுக்கான தொகையினை 'மார்க்கெடிங் ஆபீஸர், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி' என்ற முகவரிக்கு அனுப்புதல அவசியம்.**

(16-ம் பககத் தொடர்சசி)

செல்லும சாரதிககும் விதி வதை செய்கிறது. அவனேயும் அவதாரம் எடுகக வைக்கிறது. ஈசன் அதை திருவிளேயாடடாய்ச் செய்கிருன். பிரமன் படைத்துப் படைத்துச சலிக் கிருன்.

இபபிருகிருதியின் வேறுபட்ட கோணங்களில நடிக்கும பிறவிகள் அத்தனேக்கும விதியவஸதை உணடு. கடமையின கூறுகளே விதி. தன்னுல் செய்ய முடியாத கடமைகளே இம்மா னிடன் விதி என்கிருன். தன்னுல் செய்ய முடிந்த கடமைகளே இறைவன் லீலே என்கிருன். இரு வருககும் இடையே தான் ஓடி ஆடித் தன் வேலேயைச செயகின்றன கோள்கள்.

சூரிய மணடலத்தின் பிரதிபிமபமே மனிதன. அதாவது மனிதனின் உடற் கூறுகள் நவககிரகங்களால் ஆக்கிர மிப்பு செய்யப்பட்டுள்ளன.

சூரியன் சிரசிலும், புதன நுரை யீரல்களிலும், சுக்கிரன் ஹிருதயத் திலும், பூமி (செவவாயின ஒரு கூறு) வயிற்றிலும. சநதிரன் கல்லீரலிலும், செவ்வாய் கைகளிலும், குரு ஆண் பெண் உறுப்புக்களிலும், சனி கால் களிலும நிதயாவஸ்தை செயகின் றன. இவ்வாறு மனிதனின் திரேகத் தில் அவஸ்தை செய்யும் கிரகங்கள தம்முடைய உச்சகட்டக் காலங் களில், ஜாதகனின் வேதனேக்கு ஆளா கிறது. ஆகவே தீமையான காலங் களில், சோதிடர்களிடம் சாதகத் தைக் காட்டிப் பரிகாரம் காணுதல் நன்மை பயக்கும். அது கிரகத்தின் வீர்யத்தை தணித்து அவற்றின் வேக மான துர்செயலேத் தண்டிககின்றன.

**பானுவுக்கிந்திடுந் தானமது கன்றீன்ற**
**பசுவாகு மதி தனககுப்**
**பானிறச் சங்கு செவ்வாய்க்குச்**
**சிவப்பெருது பைம்புதற்குச்**
**செம்பொனும்**
**வானியல வியாழந்தனக்கு**
**வெண்பட்டாடை மாசுக்கிரற்கு**
**வெள்ளி**
**மநவிய மசனிககுமிவை கரிய நிற**
**மாயிலகு**
**மயிடமா வெருமைக்கடா**
**தானியலிராகு வுககசசங கருப்புடைத்**
**தான வெள்ளாட்டுக கடா**
**தக்கசெங்கேதுவுக் கோதரிய மதயானே**
**சாற்று மறையோாக் களித்தல**
**ஆனது நவக்கிரக தான விதியி**
**தென்பர்**

செல்வந்தர்கள் மேற்சொன்ன பரிகாரய் செய்யலாம. ஆனுல் மறற வர்களிக்கு எளிதில பரிகாரம் செய் வதற்கு கீழ்ககண்ட பாடலில சொன்னபடி சம்பந்தப்பட்ட கிரகத் திற்கு பீடாபரிஜாரம செய்யலாம்.

**சூரியன் கோதுமை செஞ்சாலி சோமனுந்**
**துவரை செவவாய் தனக்காரு**
**சொலலரிய புந்திக்கு நற்பசும பயறதாந்**
**தூய் வியாழநதனக்கு**
**வேரியங்கடலேயாம் வெள்ளிக்கு**
**மொச்சையாம்**
**மேவிய சனிக் கொள்ளதாம்.**
**வெறறி கொள ராகுவுக்கான மாடங்கேது**
**விளேகாண நவதானிய**
**நாரிய வெருக்குப் பலாசலக்கருஙகாலி**
**நாயுருவி யச்சுவத்தம**
**நலலத்தி வன்னி கூர்ப்புல்லுறுகு**
**தர்ப்பையிவை**
**நலசமித்தாகுமென்றே**
**யாரிய முணர்நத மேலலரிது**
**விதியெனபா**

மேற சொன்ன தானியங்களே நவக் கிரகத்திற்கு அபிஷேகம் செய்வ தாலோ அதனே இறைத்தலாலோ சமபந்தபபட்ட கிரகங்களின் தீதுகள் வெளிப்படும. அவைகளின் வீரியங் கள் குறைந்து அவைகளால் அதிக தொந்தரவு நேராது.

ப்ராப்தி இல்லாத இடத்தில் தெய்வமே கொட்டிக் கொடுக்க விரும்பினுலும் பணத்தைப்பெற முடியுமா? எதற்கும் வேளேயும் நேர மும் வரவேணடும். முயற்சி மாத்திரம் போதாது. ஒப்புக்கொள்ளவேணடிய கூற்றுத்தானே. வேளேவர நாம் எனன செய்வது? கடிகாரத்தைத் திருப்பி வைத்தால் மட்டும் நேரம் குறையவோ கூட்டவோ செய்யாது; இறைவனேப் போற்றினுலும் தூறறி னுலும் அவனுக்கு அதில் அவ்வளவு அக்கறை இல்லே. இவன் கருணே காட்டத் தலேப்படும்போது வேளே வருகிறது.

ஈசுவரனேக் காணுதவன் வாக்கு வாதம புரிகிருன்.

தரிசித்தவன் மௌனமாய் சசசி தானநதத்தை அனுபவிககிருன்.

நற்காரியங்களேக் கடைபிடித்தவர் கள் அதனேக்காட்டிக் கொள்வதில்லே. அதனுல் வரும் தீதினேயும பொருட் படுத்தவதில்லே. தீயகாரியங்களில் ஈடுபட்டுச சாதகத்திற்கு ஆண்ட வனேப் பயன்படுத்திக கொள்பவர்கள் எல்லாம் தான் அர்ப்பணித்த பொரு ளுக்கு ஆசைப்பட்டு ஆண்டவன் கருணே காட்டியுள்ளதாகக் குறை கூறுவதும் பின்னுல் வெறுப்பேற் பட்டு அனேத்தையும் துறந்து ஆண்ட வனே கதி என்று கிடப்பதும கண் கூடாக நடக்கிறது.

The Vırtue lies in the struggle, not ın the prıze —Milnes.

அதுபோலத் தான்.

சமுதாயச் சீர்திருத்தம பேசு வோர்களுள் பெரும்பாலோர் சமுதாயத்திலுளள ஓட்டை உடைசல் களேத் துல்லியமாகப் பேசிடுவா. தீர்க்கும் வழி என்ன என்று வினவி பரிகாரம் தேட முற்படின் ஏதோ சாக்குச சொல்லி நழுவி வடுவர்.

ஆகவே வழிவழியாய் வரும் சம் பிரதாயங்களேககுக் குறை கூறும் இத் யாதிகளுடன சேராமல் சாதகமாககி கொள்ளுமபோவழிகள் தான இநத பூவுலகில் நிம்மதியை நாடுகின்றனா. வெறும குறைகூறி தன வாழவை அர்ததமற்றதாக்கிக கொள்பவர்கள் தனக்கும் நிம்மதி தேடிக கொள் வதில்லே; மறறவாகளேயும் நிம்மதி யாக வாழ விடுவதில்லே.

To handle your self use your head; to handle others use your heart.

—Anon.

முற்றும்.

# ஆத்ம ஞானம்

எல்லார்க்கும் எப்போதும் ஏற்ற தான அருமையான சித்தாந்தங்களை உருவாக்கிய நமது பாரதீய முன்னோர்கள், சனாதன தர்மம் எவ்வாறெல்லாம் காப்பாற்றப்படவேண்டும் என்று கூறிட முனையாமல், தர்மங்களை எவ்வாறெல்லாம் நடைமுறைக்குச் சாத்தியப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதைக் கூறியுள்ளார்கள் என்று பார்க்கும்போது, நம்பிக்கைக்கு உள்ள திடமான வலிவு எத்தகையது என்பதை நம்மால் உணராமல் இருக்க முடியாது. ஒரு வகைக் கனியை உண்டவனைப் பார்த்து, எதிரில் உள்ளவன், 'அக்கனி எப்படி இருக்கிறது' என்று கேட்கிறான். பழத்தை உண்டவன், கனி இனிப்பதாகச் சொல்லுகிறான். அந்த இனிப்பை, உண்டவனே முழுமையான அளவு ரசிக்க முடியும். ஏனென்றால், சுவைத்தவன் அவன்தானே. இறைவனைக் காண்பவர்கள், இறையன்பில் ஊறித் திளைத்தவர்கள், இவர்களேயல்லாமல் இறையன்பை உணராதவர்கள் எவ்வாறு இறைவன் சுவையை அறிதல் கூடும்?

பசித்த வயிறு புசித்து முடிந்தவுடன் திருப்தி கொள்ளுகின்றது, ஒருவர் கேட்க அவர்க்கு அளிப்பதிலே மனது அமைதியுறுகின்றது. நல்ல விஷயங்களைக் கேட்க நெஞ்சத்தில் ஆனந்தம் மேலிடுகின்றது. சிறு மதலையின் தளிர்மேனி தொட்டால் இனிக்கிறது. மதலையின் மழலையிலே சொக்கிப்போய் உலகை மறந்து விடுகிறது. நல்ல இசையின் பால் இதயம் ஈர்க்கப்படுகிறது. வீசுகின்ற காற்றால் தேகம் சுகானுபவம் பெறுகிறது. எவ்வளவோ இனிமையான நினைவுகள்—கனவுகள். இவற்றிலெல்லாம் இனிமையான பரவச நிலை. இவைகளெல்லாம் நிரந்தரமா?

இல்லை, இல்லவே இல்லை.

பேரின்பம்! அது கிடைக்கவேண்டும். அது கிடைத்திட ஆத்ம ஞானம் பெற வேண்டும். ஆத்ம ஞானம் பெற்றிட சாதனை புரிதல் வேண்டும். ஆத்ம சாதனையே பக்தியின் படிப்படியான மெய்யறிவை ஊட்ட வல்லது. நீருடன் சேர்ந்த பாலினின்று நீரைப் பிரித்திட இயலாது. ஆனால், தண்ணீரில் மிதக்கின்றதே வெண்ணெய் நீருடன் சேருவதில்லையே. அது ஏன்? பாலினின்று உருவான வெண்ணெய் ஏன் மீண்டும் பாலாகவில்லை. பாலாக நீருடன் ஏன் கலக்கவில்லை? ஒரு வகையான மாறுதல்களுக்குப் பின்னால் ஏற்படுகின்ற விளைவுகள் மீண்டும் முந்தைய நிலையை அடைவதில்லை. மேலும், மேலும் பலவகை மாறுதல்களே உண்டாகுகின்றன.

மனத்தை அதன் இஷ்டப்படி அலைய விடாமல் நமது இலக்குக்கு ஏற்ற இஷ்டப்படி கட்டுக்குள் கொண்டு வர வேண்டும். அம்மாதிரி, ஒட்டியிருக்கவும், தள்ளியிருக்கவும் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டால், லோகத்தில் நாம் கருதுகின்ற போகப் பொருட்கள் யாவும் கடலில் துரும்பாய்க் காட்சி தந்திடும்.

மனத்தை மிதக்க வைக்கப் பழக வேண்டும். கடல் நீரில் படகு இருக்கலாம். ஆனால், கடல் நீர் படகுக்குள் வரக்கூடாது—வரவிடவும் கூடாது. சிறிய ஓட்டைதானே எனக் கொள்ளும் அலட்சியப் போக்கு ஆயிரம் ஓட்டைகள் உண்டாவதற்குக் காரணமாகிவிடும். அப்புறம், நமது சிந்தனைக்கும் செயலுக்கும் இடையே பலகாத தூரம். இறைவனை நெருங்கிட நெருங்கிட இனிய அனுபவங்களே ஏற்படுகின்றன. இறைவனை விட்டு நாம் விலகிச் சென்றிட, சென்றிட நமக்குத் துயரங்களே நேரிடுகின்றன.

கடலில் சிக்கித் தவிக்கும் படகுக்குக் கலங்கரை விளக்காய் நின்று வழிகாட்டும் தெய்வமாய் பகவான் இருக்கிறார்.

ஆழ்கடலில் அற்புத முத்துக்கள் இருப்பதைப்போல அவரது அருட்கடலுக்குள் மூழ்கித் திளைப்பவர்களுக்கு வாழ்க்கையில் வளத்தைத் தருகிறார்.

தேம்பியழுதிடும் மழலைச் செல்வத்தை மார்புறத் தழுவி அமுதமூட்டும் தாயாய் இருப்பவர் பகவான்.

**சத்தியம் ஒன்றே நித்தியமானது!**
**நித்தியமானது சத்தியம் ஒன்றே!**
**சத்தியமே தெய்வம்-தெய்வமே சத்தியம்.**



**இன்னிசைக் கவிஞர். இரா. நக்கீரன். வேலூர்.**

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.




திருமலை திருப்பதி தேவஸ்தானம்

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்)கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |

### கைங்கர்யங்கள் (செய்து வைபபது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம | ,, | 200 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கமபூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிணணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிணணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலஸாபிஷேகம | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவருக்ஷம, பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம, முத்துபபந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம, ஹனுமநத வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| ததயோதனம | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 85 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 450 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 225 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்துளை | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கறபூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரஙகளுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருபபதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

என்று சொல்ல, ஏற்றுக்கொள்கிறர். அபபொழுது சுக்ரீவன் சொல்கிருன் ''அவன் ஒற்றன், ஐந்தாம் படை, உன்னைக் கொன்று விடுவான்'' என்றெல்லாம். இதற்கு ராமன சொல்கிருர்.இது ஒருஅருமையான கருத்து. ''சுகரீவா ! எனனை நோக்கி ஒருவன் சரணுகதி என்று விழுந்து விடடால், அவனுககு சரணுகதி இல்லை என்று நான் சொல்கிறேனே அன்றுதான் நான செத்தநாள். என்னைச் சரண் எனப் புகுகினருனைத் துறநத நாள் அன்றே இறந்த நாள''—யாருக்குச் சரணுகதி கொடுத்தேனே அவனே ஏதாவது சூழ்சசி செய்து என்னைக் கொன்று விடடால் அன்றுதான் நான் புகழுடன இருநத நாள்!''

ஆக திருவடியை நோக்கி யார் விழுநதாலும அவனை ஏறறுக்கொளள வேண்டியது கடவுளுக்குக கடமை. ஆகவே, சரணுகதி தத்துவத்தை ஏற்கிறவாகளெல்லாம் லக்ஷ்மணன கொடுத்த விளககத்தை ஏற்றுக கொள்ளததான வேணடும. சுக்ரீவன் முனனே வநதான் அவனுககு முனனே அடைககலம. ஆக,சரணுகதியிலே முநதிக்கொள்கிறவன பிழைத்தான். உனமைதான. அதனுலே தான தெய்வததினுடைய காலிலே சீககிரம விழுந்து விடு என்கிருர்கள.

இதையே ராமனே செனனுல நன்ருக இருக்குமா? இருககாது. அதனுல் தான வாலி கேடட இநத கேள்விக்கு ''இலககுமனன இயம்பலுறருன்''

இப்போது, சரணுகதி தத்துவ அடிபபடையிலே, ராமன வாலியை மறைநது நின்று கொன்ருன் என்பதறகு இந்த விளக்கம். ஆனுல், எல்லோருமே ராமாயணத்தை சரணுகதி காப்பியம் என்றே பக்தி காப்பியம் என்றே வாலி மோக்ஷத்தைப் பாாககிருர்களா எனன ? இலககிய ரீதியாகவும் இதற்கு நியாயம் பார்க்க வேண்டாமா ? இனி அதைப் பாாப்போம்.

பெரும்பாலும் மக்கள் இதற்குச் சொல்லுகிற காரணம், அனுமன் சொன்னனல்லவா, வாலியின் பலத்தைச் சொல்கிறபோது. 'வாலியின் எதிரே யார் நின்று போர் செய்தாலும் அவனுடைய பாதி பலம் வாலிக்குப் போய் விடும்' என்று. அதனுல் தான் ராமன் மறைநது நின்று கொன்ருன். வாலிக்கு எதிரே ராமன் வநது போர் செய்தால் ராமனுடைய பாதிபலம் வாலிக்குப் போய் விடும். அதாவது, $1\frac{1}{2}$ வாலி$=\frac{1}{2}$ ராமன். அதனுலே மறைந்து நின்ருன் இதெல்லாம் காரணமேயில்லை.

வாலிககு முன்னுல் நின்று போர் செய்கிறவர்களுடைய பலத்தில் பாதி அவனுக்கு வந்துவிடும் எனற வரத்தை வாலி பெற்றிருககிருன் என்ருல், ராமபிரான் வில்லிலிருந்து புறப்பட்ட பாணம்-இலக்கு-குறிக்கோளை அடைநதே தீரும் என்ற வரம் ராமனுககும் உணடு ! இல்லையா ? ராம பாணம் இலககு தவருதே! வாலிக்கு இருககிற பலம் அப்படி என்ருல் ராமனுக்கு இருக்கிற பலம் இப்படி! பரசுராமனை நோக்கி இலக்குவைத்த பிறகு, அவர் காவபங்கம் செய்த நேரததிலே, இநத இலக்கிற்கு ஏதாவது இடம காட்டு, இல்லையெனருல் திரும்பாது என்கிருரல்லவா ராமன் ஆக வாலிக்கு அநதச சிறப்பு. ராமனுககு இந்தச் சிறப்பு ஆகவே இது காரணமாக இருகக முடியாது.

இரண்டாவது காரணம், இலக்கிய ரீதியாக, வாலி பாவி: அதனுலே சாகுமபோது அவனைப் பார்க்கக கூடாது என்று மறைநது நின்ருர்: வாலியா பாவி? சாகிறபோது கடவுளை நேராகப் பார்க்கும புண்ணியம் இருநததே! சாகிற போது கடவுளைப பார்த்தவாகள இரண்டுபேர். வாலி கர்ணன் இவாகள. ஆகவே இதுவும் காரணமாக இருக்க முடியாது.

சரியான காரணம். வாலி தன்னுடைய கடமையை மறந்தான். கடமை மறந்த பாததிரமாக மாறிருன். கடமை மறந்து விட்டால் அநத குறறத்தை ஏற்றுக் கொள்ள வேண்டியவன் உடமையாளன். ஆகையால் மறைந்து நின்ருர் ராமன்! இவ்வளவுதான்.

வாலி இராவணனேடு உடன்பாடு செய்து கொணடிருக்கிருன். 'உனக்கு எவ்வளவு துன்பம் வந்தாலும் கவலைப்படாதே. நான் உதவிசெய்கிறேன்' என்று. வாலியார்? இந்திரன். ராவணனுடைய கொடுமை தாங்க முடியவில்லை என்று தேவாதி தேவர்களும் இந்திரனும் சேர்ந்து திருமாலிடம் வேண்டினுர்கள். அவர்களைக் காக்கத்தானே திருமால் வந்திருக்கிருர் ராமனுக. 'உங்களுக்காக நானே தசரத புத்திரனுக அவதரிக்கிறேன். ஆதிசேஷன் லக்ஷ்மணனுவான். சங்கு சக்ரம் பரத சத்ருக்னனுவார்கள். ராவண வதார்த்தம் நீங்கள் எல்லோரும் பூலோகத்திற்கு வாருங்கள். இந்திரா, நீ வாலியாய் பிற. மற்ற தேவர்களெல்லாம் வானரங்களாகப் பிறக்கட்டும்.' என்று சொன்னுரல்லவா ராமன? அதன்படிதானே வாலியாகவும் மற்ற தேவர்களாகவும் வந்திருக்கிருர்கள்? அப்படி வந்ததன் நோக்கம் ராமபிரானுக்குத் துணை நிற்க வேண்டியது தானே? தருமத்துக்குத்துணை நிற்கத்தானே வேணடும? ஆனுல் இங்கே வந்த வாலி (இந்திரன்) ராவணனேடு சேர்ந்துவிட்டான். ராமபிரான் வந்ததே இவனுக்காக. இவன் போய் எதிர்கட்சியிலே சேர்ந்துவிட்டான் ! வாலி தன் பாத்திரத்தை மறந்தான்! பாத்திரம் மறந்தவனை உடமையாளன் தண்டிப்பது போல தண்டித்தார் ராமன் ! எப்படி ?

ஒருவன் நாடகம் போடுகிருன். முதல் நாள் சிலப்பதிகாரம் அதிலே கோவலனும் கணணகியும் திருமணமாகி முதலிரவிலே பேசுகிற காட்சி. கோவலன் கண்ணகியிடம் வந்து, 'மலையிடை பிறககாத மாணிக்கமே!. அலையிடைப் பிறக்காத அமுதமே !...... .. இப்படி வசனம் பேசு

கிருன். எல்லோரும் ஆஹா ஆஹா என்று ரசிக்கின்றனா. மறுநாள் ராமாயணம நாடகம். அதிலே லக்ஷ்மணன் ராமனுேடு காடடுக்குப் புறபபடும முன தன தாயிடம் அனுமதி வேண்டும காட்சி. முதல்நாள் கோவலனுக நடித்தவன் தான் இரணடாம நாள் லக்ஷ்மணன. முதல் நாள கண்ணகியாக நடித்தவள் இரணடாம் நாள் லக்ஷ்மணனுக்கு அமமா. இன்று இவன் என்ன வசனம் பேச வேணடும்! ''தாயே, ராமபிரான் கானகம செல்கிருன், யானும செல்கிறேன். உத்தரவு கொடுங்கள தாயே'' என்றல்லவா. ஆனுல் இநத பாவி, முதல் நாள் பேசினுனே, ''மலேயிடைப் பிறக்காத மாணிக்கமே! அலேயிடை பிறக்காத அமுதமே. ...! இதைப பேசித தொலேத்தான்! இப்படி பாத்திரம மாறி வசனம் பேசினுல் நாடகததின் உரிமையாளன் தோல் அல்லவா உரியும்? அந்த உரிமையாளன அப்பொழுது என்ன செய்வான்? சடாரென்று மேடைக்கு வந்து 'என்னடா பாவி, இப்படி பேசி விட்டாயே' என்று கர கர வெனறு உள்ளேயா இழுத்துக்கொண்டு போவாா?அப்படி செய்தால் அந்த உரிமையாளனேயல்லவா அடையாளம கணடு கொணடு விடுவாாகள்? அதற்காக அவன் எனன பணணுவான்? தன உருவத்தை வெளியேகாட்டாமல், மறைந்து நினறு, சடடையை வெடுக்கெனறு பிடிததிழுத்து, உள்ளே இழுத்து விடுகிற மாதிரி, உலக நாடக சாலேக்குத தலேவராகிய திருமால், இந்திரன் வாலியாக வநது, தன பாத்திரம் மாறிவிட்டதால் மறைநது நின்று இழுத்து விட்டார் என்பது தான் மறைந்து நின்று அடிததததற்குச் சரியான காரணம்!

இனி அங்கதனே ராமன் கையிலே ஒப்படைத்து விட்டு, 'வாலி இறந்தான்' என்று கமபர் சொல்லவிலலே. ''வானுக்கு அப்புறத்து உலகம் ஆயினன்'' என்கிருர்! வாலி இறந்த நிகழ்ச்சியை சொல்ல வருகிற கம்பர் போட்டிருக்கிற பதம் ''வானுககு அப்புறத்து உலகம'' ஆயினன். இந்த தொடர் வேறுயாருக்காவது போடப் பட்டிருக்கிறதா என்று பாாததால் வேறு யாருக்குமே கிடையாது. தசரதனுக்கு போடப்பட்ட பதம் ''வானுலகு அடைந்தனன்'' ஆனுல் வாலிக்கு பட்ட பதம், 'வானுக்கு அப்புறதது உலகம ஆயினன்'.

அதெனன, வானுலகு என்பதற்கும், வானுககு அப்புறத்து உலகம் என்பதறகும என்ன வித்தியாசம்?

நமது ஹிநது சமய மரபுப்படி இந்த பிறவியுள்ள இநத உலகத்திலே நாம் இறநத பிறகு நம்முடைய நல்வினே தீவினேகளினுலே நம்முடைய ஆனமா நிாணயிக்கப்படடு, வானுலகு என்று ஒன்று இருககிறது, அதிலே இந்த உயிர் போய் தங்குகிறது. நல்வினே செய்தவருக்கு, வானுலகுக்குப் போனுல் தான் அவர்களுக்கு வானர்கள் அல்லது தேவர்கள் எனறு பெயர். ஆனுல வானுலகுக்குப் போனுலும் அது மறுபடியும் பிறப்பதற்குரியது. வானுலகுக்கு அப்பால் ஒரு உலகம உளளது. அதறகு மோட்ச உலகம எனறு பெயா அங்கே போனுல் பிறப்பே கிடையாது!

ஆக, வானுலகு என்று ஒன்று உணடு. அஙகே போவது பெருமை தான். ஆனுல் அங்கே போனுலும மீணடும் பிறவி உணடு. வானுக்கு அப்புறத்து உலகம் என்று ஒன்றிருக்கிறது. அது மோட்ச உலகம். வீட்டு உலகம. அங்கே சென்ருல் பிறக்கவே வேணடாம்.

இரணடு உலகங்களேயும் வள்ளுவர் காட்டுகிருர் பாருங்கள்.

**''வையத்து வாழ்வாங்த வாழ்பவன**

**வானுறையுட**

**தெய்வததுள வைககப்படும''**

''வைககப்படும்'' என்ருல எனன? தவறு செய்தால் இறக்கப்படும! இல்லேயா? இனனுரை இவ்வளவு காலம ஆட்சியில் 'வைககப்படும' என்ருல என்ன அாத்தம்? தவறு செய்தால் இறக்கபபடும்! ஆக வானுலகுககுப் போனுலும் மறுபடியும் பிறவி உண்டு என்ருகி விட்டதல்லவா?

இனி, வானுலகுக்கு அபபால் ஒரு உலகம் இருக்கிறது. அஙகே போனுல பிறப்பில்லே என்பதற்கு என்ன சான்று? இதோ, அதறகும ஒரு திருக்குறள.

**''யான எனது எனனும செறுக**

**கறுபபான**

**வானேர்ககு உயாந்த உலகம் புகல''**

'வானேர்க்கு உயாநத உலகம் புகல' என்று சொன்னதினுலே வானேர்க்கும் உயாந்த உலகம எனறு ஒன்று இருக்கிறது என்ருகிறதலலவா? அதற்கு எனன பதம் போட்டிருககிருா? 'வானேர்க்கு உயர்நத உலகம 'புகல்'. 'புகல்' எனருல் புகுதல; வருதல கிடையாது!

ஆக, வாலியினுடைய உயிா எஙகே போயிறறு? 'வானுககு அப்புறத்து உலகன் ஆயினன்.'' குரங்கு வாலியான இவனே தெய்வவாலியாகஆக்கி, அவனுககு மோட்ச சாம்ராஜ்யத்தை கொடுக்க வேணடும் என்பதறகாகத தான இராமபிரான வநதார் எனகிற நியாயததை, கம்பன கடைசியாக வாலி இறந்த போதும காட்டுகிருன்.

**முறறும்.**



# கீதை காட்டும் நல்வழி

*அத்தியாயம்–11*

## விசுவரூப தரிசன யோகம்

பகுதி — 3

*"அர்ஜுனா! நீ மிகவும் அதிருஷ்ட சாலி. ஏன் தெரியுமா? தேவ தேவர் களுக்கு, முனி புங்கவர்களுக்கு எந்த ஒரு பேறு கிட்டவில்லையோ, எந்த ஒரு பாக்கியத்தைப் பெற அவர்கள் பல காலம் தவம் கிடக்கின்றார்களோ, அந்த ஒருபேறு உனக்கு இப்பொழுது கிட்ட இருக்கிறது. அது என்ன தெரியுமா?"*

*பகவான் சொல்லுகிறார் :*

**இஹைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம்**
**பசயாத்ய ஸசராசரம்!**
**மம தேஹே குடாகேச**
**யச்சான் யத்ரஷ்டு மிச்சஸி ॥**

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் "சமய ஜோதி" மதுரை

'அர்ஜுனு! சரம அசரம் ஆகிய இந்தப் பிரபஞ்சம் முழுவதையும ஒரே இடத்தில் இந்த எனது தேகத்தில் நீ பார்த்துக் கொள். தவிர உனககு எனன வெல்லாம் பார்க்க வேண்டும் என்று விருப்பம் உள்ள தோ அஃதனைத்தையும் இபபொழுது பார்ப்பாயாக'.

'குடாகேச' – அர்ஜுனனுக்கு மற்ருெரு பெயர் இது. தூக்கத்தை வென்றவன என்பது இதன் பொருள் ''அர்ஜுனு! நீ இப்பொழுது மயக்கமாகிய உறக்க நிலையில் இருக்கிருய். எது மெய் எது பொய் என்பதைப் பகுத்தறிய இயலாது இருக்கிருய். எனது திவ்விய ரூபத்தையும் அந்த மயக்க நிலையில் பார்க்காதே. மயக்கம் தெளிந்து பார். அப்பொழுது தான் ஐயம் அகலும்'', என்கிருர் பகவான். ஒரு செயலில் வெற்றியை விரும்புபவன் முதலில் தூக்கத்தை வெல்லவேண்டும். அதிகமாகத் தூங்குபவர்களுக்கு இம்மையுமில்லை, மறுமையுமில்லை. காந்திஜி. நேருஜி, நெபோலியன் போன்றவர்கள் தூக்கத்தை வென்றதனுல்தான் பெரு நிலையை அடைந்தார்கள். தூக்கம் குறையக் குறைய செயல் திறன் கூடும் என்பது வள்ளலார் கண்ட முடிவு. 'அதிகமாகத் தூங்கி வாழ்க்கையை வீணடிக்காதீர்கள்!' என்று பகவான நமக்கு எச்சரிக்கை விடுக்கிருா.

'அத்ய'–இநத வார்த்தை இனறே, இன்னே எனறு பொருளபடுகிறது. பகவானது திவ்விய ரூபத்தைத் தரிசிக்க வேண்டும் என்று அர்ஜுனன் தனது ஆவலை வெளியிட்ட உடனேயே சிறிதும தாமதியாது பகவான் அவனது அந்த ஆவலைப் பூர்ததி செய்கிருர்.

திருவாசகத்தில் மணிவாசகரின் வாக்கு இது :

'வேண்டத் தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதுந் தருவோய் நீ'

—'எனக்கு எது வேண்டும் என்பதை இறைவா, நீ அறிவாய். நான் வேண்டியதும் அதை அப்படியே தரும் தயாளன் நீ' என்கிருர் அவர். அதையேதான் நாம் இங்கே காண்கிறேம். அர்ஜுனனது வேண்டுகோள் மனப்பூர்வமானது என்பதை யறிந்ததும் பகவான் சிறிதும் தாமதியாது அதைப் பூர்த்தி செய்கிருர்.

இவ்வுலகில் உள்ள அனைத்துப் பொருள்களையும் நாம் இரண்டு விதங்களாகப் பிரித்துவிடலாம். ஒன்று சரம், அசைவன அதாவது நகர்வன. மற்றது அசரம் அல்லது அசையாதன. அதாவது உயிருடையவை, உயிரற்றவை என்றே அல்லது உயர்திணை அஃறிணை எனறே பொருள்களை இரு வேறு வகைப்படுத்தலாம். விலங்குகள், பறவைகள், பூச்சிகள, புழுக்கள், மனிதர் போன்ற இனங்கள் யாவும் 'சரம்' எனப்படும். மலை, மரம் போன்ற இடம் நகராதவை 'அசரம்' எனப்படும். இவையனைத்தையும் தொகுத்து ஒரே சமயத்தில் தம்மிடத்தில் காணுமாறு பகவான் அர்ஜுனனைக கேட்டுக் கொள்கிருர். தோற்றத்துக்கு வந்துள்ளது யாவும் இறைவன சொரூபமே என்பது இதன் உட்கருத்து.

'இஹைகஸ்தம்' —இஹ – இங்கே, ஏகஸ்தம்—'ஒரே இடத்தில்' மொத்தமாகப் பார். ஒவ்வொரு நாட்டிலும் உள்ள பிரதமரையோ அல்லது ஜனதிபதியையோ தனித் தனியாகப் பார்ப்பது என்பது எவ்வளவு கடினம்! ஆனல் ஐக்கிய நாட்டுப் பொதுச் சபையில் ஒரு மிக முக்கியக் கூட்டத்தில் அத்தனை நாட்டு முக்கியத்தலைவர்களும் ஒரே நேரத்தில் பங்கு கொள்ளுகையில் அவர்களை ஒருங்கே பார்ப்பது மிக எளிதல்லவா! அதுபோல் தேவர்கள், முனிவர்கள் மற்றும் காணற்கரிய காட்சிகளை தனித் தனியாகப் பார்த்தல் என்பது மிகக் கடினம். ஆனல் அனைவரையும், அனைத்தையும் ஒரே சமயத்தில் இறைவனது திவ்விய சொரூபத்தில் காணபது என்றது எத்தகைய பாக்கியம்! அதைததான் அர்ஜுனன் இப்பொழுது பெற இருக்கிருன்.

'யச்சான்யதரஷ்டு மிச்சஸி' — இவை தவிர வேறு எதைப் பாாக்க வேண்டும் என்று நீ விரும்புகிருயோ அதையும் நீ பார் !

அர்ஜுனன் இருப்பது போர்க்களத்தில். இப்போது அவன் மனத்தில் இருக்கும் ஐயம் எது? 'இந்தப் போரில் வெற்றி எனக்கோ அல்லது என் பகைவர்களுக்கோ! நான் போரில் வெல்வேனே அல்லது தோற்பேனே? நான் இன்னும் சிறிது நேரத்தில்

# ஸ்ரீ கண்ணன் வளர்வெட்டு

திரு. என். எஸ். ராஜகோபாலன் - சென்னை.

கண்ணனவன் தாயவளின் கண்ணெனவே காணிப்பில்
அண்ணனுடன் வளருகின்ற பொழுதினிலே—எண்ணமதாம
தணமுலையால் விடமதனை தருகின்றான் பூதனையும்
உணமையறிந் துயிர்கொண்டான் உயிர்த்து.

தயிர்வைத்து தான்சென்ற தருணத்தில் தூயவனும
துயில்கொண்டோன் சமயத்தில் தருணமென—மயில் நிறத்தான்
இருகையால் அள்ளுகின்றான் இருப்பதையே கீழ்கொட்டி
பருகுகின்றான் புகழாளன் பார்.

வந்துவிட்டாள் தாயவளும் கண்டுவிட்டாள் காரணனை
நொந்தமனம் சினத்தினினால் வருகின்றாள்—இறையவனும்
இருகையால் இருகண்ணை இறுகிடவே தாம்மூட
இருவேழைக் கண்டனளே அதிர்ந்து.

உலகெல்லாம் காணீரோ உம்பரெலாம காணீரோ
புலனுள்ளோர் காணீரோ புகலிவனே—அகமதிலே
கடலெனவே மகிழ்வுறுவாள் களங்கமிலா காரிகையும்
உடலுயிராய் களித்திட்டாள் வியந்து.

கிருட்டினனும் யசோதையிடம் அன்புருவாய் வளாகின்றான்
அருச்சுனன்கு அருள்புரிந்தோன் தானும்—அரும் மகவை
ஈன்றெடுத்த பெருமையினால் இன்பமதை பெற்றிட்டாள்
தேனெனவே பேசிடுவாள் மாது.

பினபொருநாள் உரலோடே பிணைத்தவுடன் சென்றிட்டாள்
அன்புருவாம் மாயவனும் கணடான்—மன்பதையில்
பரமனவன் உரலுக்கோ பயந்திடுவான் இல்லாதே
உரலோடே இழுத்திட்டான் பாடு.

தன்வீட்டில் திருடத்தான் தாயவருக் கிட்டமிலை
பினவீட்டில் எடுத்திடவோ பஞ்சம்—பொந்நாட்டான்
கழிவிரக்கங் காட்டாதார் கணணன்செய லைக்கண்டார்
பழிகூற வந்திடுவார் பயந்து.

திண்ணமுடன் பாடிடுவோம் என்னதவம் செய்தனளோ
கண்ணனவன் தாயாகக் காரிகையும்—பணபாடும்
எண்ணரிய கவியுளரே கண்ணனவன் புகழ்கூற
உன்னதமாய் நீதினமும் ஓது.

இருப்பேனோ அல்லது இறப்பேனோ?'- என்பன போன்ற எண்ணங்கள் அவனது மனத்தில் குறுக்கிடுகின்றன. சுருங்கச் சொன்னால் தனது எதிர்காலததைப பற்றிய எணணம் அவனது மனத்தின் மேல் தளத்தில் இருக்கிறது. 'இப்போரில் இனி என்ன நிகழும்?' என்பதையும் அர்ஜுனா! நீ என் திவ்விய ரூபத்தில் பார்த்துக் கொள்' என்கிறார் பகவான்.

இவவிதம் திரும்பத் திரும்ப தமது திவ்விய ரூபத்தின் பெருமைகளைப் பற்றி எடுத்துக் கூறி அதைக்கண்டு களிக்குமாறு பகவான் அர்ஜுனனைக் கேட்டுக் கொணட போதும் கூட அந்த ரூபத்தைக் காண இயலாமல் அர்ஜுனன் தவித்து நிற்கிறான். தமது ரூபத்தை ஏன் அர்ஜுனனால் காண முடியவில்லை என்பதைப் பகவான் கண்டு கொள்கிறார். உடனே அதை விளக்கி, தமது விசுவ ரூபத்தைக் காண்பதற்கு அர்ஜுனனுக்கு உதவியருளுகிறார்.

**ந து மாம் சக்யஸே த்ரஷ்டும்**
**அனேனைவ ஸ்வசக்ஷுஷா |**
**திவ்யம ததாமி தே சக்ஷு :**
**பச்ய மே யோகமைஸ்வரம் ||**

"ஆனால் என்னை நீ உனது இந்த ஊனக் கண்களால் நிச்சயமாகப் பார்க்க முடியாது. எனவே நான் உனக்கு ஞானக் கண்ணைத் (திவ்விய சக்ஷு) தந்தருளுகிறேன். எனது மேலான தெய்வீக யோகசக்தியைப் பாரப்பாயாக."

குருடன் ஒருவனின் முன்னால் நிலைக்கண்ணாடியை வைத்து என்ன பயன்? குருடனால் எதையும் பார்க்க முடியாது. செவிடனால் எதையும் கேட்க முடியாது. அதுபோல திவ்விய மங்கள தேஜோ ரூபியாய் பகவான் அர்ஜுனனுக்கு முன்னர் நின்று கொண்டிருந்த போதிலும் அர்ஜுனனால் அதைப் பார்க்க முடியவில்லை. ஏன்? இறைவனது திவ்விய ரூபத்தை வெறும ஊனக்கணகளால் பார்க்க முடியாது. எனவே பகவான் தமது திவ்விய ரூபத்தைப் பார்ப்பதறகு உதவும் வகையில் அர்ஜுனனுக்கு "திவ்விய சக்ஷு" அல்லது ஞானக் கணணை கொடுத்தருளினார்.

எத்தனையோ மைலகளுக்கு அபபால் பாடும் பாட்டை நாம் நமது வீட்டில் உள்ள ரேடியோவில் கேட்கவில்லையா? எங்கோ நிகழும் நிகழ்ச்சியை நாம் நமது வீட்டில் உள்ள டெலிவிஷன் பெட்டியில் பார்க்கவில்லையா? வெறும் கண்ணுக்குப் புலப்படாத சிற்றுயிர்கள் பல 'மைக்ராஸ்கோப்' மூலம் பார்த்தால் கணணுக்குத் தெரிவதில்லையா? அது போல ஞானக் கண்ணைப் பெறுகை

*யில் அர்ஜுனனால் இறைவனது விசுவ ரூபத்தைப் பார்க்க முடிந்தது. நம்மாலும் முடியும். எப்பொழுது? ஞானத்தைப் பெறும்பொழுது.*

*அர்ஜுனன் தமது விசுவரூபத்தைப் பார்க்க வசதியாக பகவான் தமது யோகபலத்தினால் ஒருவித யோக சக்தியை அவனுக்கு அளித்தார். இந்த யோகசக்தி திவ்விய திருஷ்டி எனப் படுகிறது. ஸஞ்ஜயருக்கும் வேதவியாசர் இத்தகைய திவ்விய திருஷ்டியை அளித்தார். அதனால் தான் போர்க்களத்தில் நடந்த நிகழ்ச்சிகளை அரண்மனையில் இருந்த ஸஞ்ஜயருக்கு திருதராஷ்டிர மன்னனுக்கு எடுத்துச் சொல்லக் கூடிய ஆற்றல் ஏற்பட்டது. இதை ஆங்கிலத்தில்* clairaudience, clairvoyance *என்று சொல்கிறோம். அன்று ஸஞ்ஜயர் அப்படிப் பார்த்ததை நாம் இன்றைய டெலிவிஷனுடன் ஒப்பிடலாம். ஒன்று மெய்ஞ்ஞானத்தின் விளைவு. மற்றது விஞ்ஞானத்தின் விளைவு.*

*திவ்விய திருஷ்டி அல்லது ஞானக் கண்ணைப் பற்றிய ஒரு விளக்கம் சாந்தோக்கிய உபநிஷதத்தில் கீழ்க்கண்ட வாறு காணப்படுகிறது:*

**"मध्वन्मर्त्यं वा इदं शरीरमात्तं मृत्युना तदस्य अमृतस्य आत्मनो अधिष्टानम् अशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः।**

**एवमेवैष संप्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिक पसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते।**

**अथयोवेदेदं मन्वानीति स आत्मा मनोऽस्य दैवं चक्षु: स वा एष एतेन दैवेने चक्षुषा मनसै-तान् कामान् पश्यन् रमते।**

**(छान्दोग्य–८–१२)**

*'இந்த சரீரம் அழியும் தன்மையது. அது மரணத்திற்கு உட்படினும் அழியாத ஆன்மாவின் உறைவிடமாக விளங்குகிறது. சரீரம் இல்லாத ஒருவனை துன்பமும் இன்பமும் ஒன்றும் செய்யமாட்டா. உடலற்ற காற்று, மேகம், மின்னல் ஆகியவை ஆகாயத்திலிருந்து கிளம்பி மேலான ஒளியை அடைந்து அவற்றிற்குரிய சொரூபத்துடன் திகழ்கிறது'.*

*பகவானது திவ்விய திருஷ்டியின் உதவியினால் அர்ஜுனன் கடந்த, நிகழ் மற்றும் எதிர்கால நிகழ்ச்சிகள் அனைத்தையும் பார்த்து அறிந்து கொள்ளும் பேற்றினைப் பெற்றான்.*

*அர்ஜுனனுக்கு ஞானக் கண்ணைக் கொடுத்து பகவான் எவ்வாறு தமது விராட் ரூபத்தைக் காண்பித்தார் என்பதை இனி அடுத்து வரும் ஐந்து சுலோகங்களில் ஸஞ்ஜயர் எடுத்துக் கூறுகிறார்.*

**அநேக வக்தர நயன**
**மநேகாத்புத தர்சனம் ॥**
**அநேக திவ்யா பரணம்**
**திவ்யாநே கோத்யதாயுதம் ॥**

**திவ்ய மால்யாம் பரதம்**
**திவ்ய கந்தானு லேபனம்।**
**ஸர்வா ஸ்சர்ய மயம் தேவம்**
**அனந்தம் விஸ்வதோமுகம் ॥**

*'எண்ணற்ற வாய்கள், கைகள், கணக்கிலடங்காத அரிய காட்சிகள், அரிய பல தெய்வீக ஆபரணங்கள், தெய்வீக மாலைகள், மணம் கமழும் தெய்வீகப் பூச்சுக்கள் கரங்களில் அரிய தெய்வீக ஆயுதங்கள், வகை வகையான அதிசயிக்கத் தக்க தோற்றங்கள் மற்றும் எல்லாத் திசைகளிலும் எண்ணற்ற முகங்களுடன் கூடிய அரிய விராட் ரூபத்தை' அர்ஜுனன் கண்டான்!*

**'அநேக வகத்ர நயனம்'**—*அநேக வாய்கள் கண்களுடன் கூடியது. சூரியனையும் சந்திரனையும் பொதுவாகப் பகவானுடைய கண்களுடன் ஒப்பிடுவது வழக்கம். ஏனெனில் பகலில் பார்ப்பதற்கு சூரிய ஒளியும், இரவில் சநதிர வெளிச்சமும் தேவையல்லவா! ஆழ்ந்து ஆராயுமிடத்து அனைத்தும் இறை சொரூபம என்பதால் அவரது விசுவரூபத்திற்குள்ள கண்களும் பாகங்களும் அனந்தமாகின்றன. இதிலிருந்து நாம் எதைச் செய்தாலும் அதை இறைவன் தோன்றா நிலையில் கண்காணித்துக் கொண்டிருக்கிறார் என்ற உண்மையை நாம் மனதில் கொள்ள வேண்டும் என்பது தெரிய வருகிறது. "நான் இப்படிச் செய்வதை யார் பார்க்கப் போகிறார்கள்?" என்று எண்ணிக் கொண்டே நாம் தினமும் எத்தனை காரியங்களைச் செய்கிறோம்! நாம் செய்யும் அனைத்திற்கும் இறைவன் தான் சாட்சி. நாம் உலகை ஏமாற்றலாம். ஆனால் நம்மை ஏமாற்றிக் கொள்ள முடியுமோ! நமமில் உறையும் இறைவனை நாம் ஒருக்காலும் ஏமாற்ற முடியாது.*

*அறிய வேண்டியதைக் கணக்கிடுகையில் நாம் இது வரை அறிந்தது ஒன்றுமில்லை என்றாகி விடுகிறது. "கற்றது கைம்மண் அளவு கல்லாதது உலகளவு" என்பது கலைமகளுடைய மதிப்பீடு எனப்படுமானால், நம்மைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ! பகவானது விசுவரூபத்தில் அர்ஜுனன் கண்ட காட்சிகள் அதுவரை அவன் கனவிலும் காணாததாய்த் தென்பட்டன. அதனால்தான் இறைவனைச் சான்றோர் "கற்பனை கடந்த ஜோதி" என்கின்றனர் போலும். அலௌகிகமான காட்சிகள் "அற்புத தரிசனம்" எனப்படும். அவையே எண்ணத்தில் அடங்காதிருக்கையில்* **"அநேகாத்புத தரிசனம்"** *எனப்படுகிறது. இன்றைய விஞ்ஞானி தனது நவீன ஆராய்ச்சிகளின் விளைவாக என்னவெல்லாம் புதுப்புது சாதனைகளைக் கண்டுபிடித்துக் குவித்த வண்ணம் இருக்கிறான்! சிறிது காலத்திற்கு முன்னர் அனைத்தும் கற்பனை என்று கூறப்பட்டவைகளில் பல இன்று சாதனைகளாகிவிட்டன. மொத்த அறிவின் விளிம்பின் ஒரு சிறு பகுதியின் சாதனைகளே இவை. அப்படியாயின் பூரணஅறிவின் திறன் எப்படியிருக்கும்! அது நம் கற்பனைக்கு அப்பாற்பட்டது. அதைத் தான் அர்ஜுனன் விசுவரூபத்தில் கண்டான். அனைத்தும் ஆச்சரியகரமாக இருந்தன. அதற்கு ஒரு எல்லையே இல்லை. எனவே அது அனந்தம் எனப்படுகிறது. பகவானுக்கு முகம எது? பிரபஞ்சம் தான் அவரது முகம்; அதாவது* **விச்வதோமுகம்.** **(தொடரும்)**

# செய்திச் சுருக்கம்

## திருமலையில் ஜனாதிபதி

1–9–79 அன்று இந்திய ஜனாதிபதி திரு. நீலம் சஞ்சீவி ரெட்டி அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தார். இதுபோது, கோயிலின முகப்பு வாயிலில் ஜனாதிபதி அவர்கள், ஆந்திர மாநில அறநிலையத் துறை அமைச்சர் திரு. பி.வி. சௌத்ரி, தி.தி. தே. மேலாண மைக் குழுத் தலைவர் என். ரமேஸன், தி.தி.தே. செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத், மற்றும் மாநில மற்றும் தேவஸ்தான உயர் அலுவலர்கள் ஆகியோரால் வரவேற்கப்பட்டார். கோயிலில், ஜனாதிபதி மற்றும் ஆந்திர மாநில முதல்வர் டாக்டர் எம். சென்னா ரெட்டி ஆகியோர் சேஷவஸ்ரத்தாலும், பவித்ரோறசவ மாலையினாலும் தேவஸ்தானத்தின் சாரபில் கௌரவிக்கப் பட்டனா. திருமலையில் ரூ. 85 இலட்சம் செலவில் அமைக்கப்படவிருக்கும் 'கியூ' மாதிரி படம் ஒன்றினைப பார்வையிட்டாா.மேலும் திருமலையில் ரூ.35இலட்சம் செலவில் கட்டப்பட்ட பேருந்து நிலையம் ஒன்றினையும் ஜனாதிபதி அவர்கள் திறந்து வைத்தார்.

## வெள்ளி விழா

இந்தியாவில் மிகவும் மெச்சத் தக்கப் பல்கலைக்கழகங்களில் ஒன்றான திருப்பதியிலுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைககழகம் 2-9-79 அன்று தனது வெள்ளி விழாவை வெகு விமர்சையாகக கொணடாடியது. இதனை ஒட்டி அன்று ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகைபுரிந்தோரை வரவேற்றுப்பேசிய பலகலைக் கழகத்தின் துணைவேநதர் டாக்டா எம். சாந்தப்பா அவர்கள், கடந்த சில ஆண்டுகளாக பல்வேறு துறைகளில் பல்கலைக் கழகம கொணடு விளங்கும் வளர்ச்சியினை விளக்கிக் கூறினார் ஆந்திர மாநில ஆளுநர் திரு. கே. சி. ஆப்ரகம் அவர்கள் தலைமை வகித்த இவ்விழாவில் பங்கேற்று பேசிய ஆந்திர மாநில முதல்வர் டாகடர் எம். சென்னா ரெட்டி அவாகள் தம உரையில் கரையோர நகரத்தில் கடல் துறை பற்றி விசேஷமாகக் கொண்ட பொறியியறகலலூரி ஒன்று அமைக்கப்பட உள்ளது என்று குறிப்பிட்டு, காவலி, கடப்பை, கர்னூல ஆகிய நகரங்களில் உள்ள முதுநிலைப் பட்டப் படிப்பு கல்வியில் மேலும பல விஞ்ஞானத் துறைகளை புகுத்துவதற்காக ரூ. 5 இலட்சம் ஒதுககப்பட உள்ளது என்றும் கூறினார்.

இவ்வெள்ளிவிழா நிகழ்ச்சிகளை இந்திய ஜனாதிபதி திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்கள துவக்கிவைத்து உரையாற்றுகையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகம் தோன்ற பல வகைகளில் முக்கிய பங்கு வகித்த மறைந்த ஆநதிரகேசரி திரு. தங்குடுரி பிரகாசம அவர்களின் பெருமைகளை நினைவுகூாநது, இன்றைய சூழ்நிலையில் இநதியாவுக்கு வேணடியது, பெறுப்புகளை ஏற்றுக் கொண்டு கடமையுணாவுடன உழைத்திடும தலைவாகள் எனறு குறிப்பிட்டார். ஆந்திர மாநில கல்வி அமைச்சா திரு. பி. வி. வெங்கட்ராம ரெட்டி அவர்கள் இது போது இவ்விழா சமபந்தப்பட்ட மலர் ஒனறினை வெளியிட்டார். கலை நிகழ்சசிகளை ஆந்திர மாநில வருவாய்த்துறை அமைசசர் திரு. ஜனார்த்தன் ரெட்டிஅவர்களும். பொருட்காட்சி ஒன்றினை ஆந்திர மாநில அற நிலையத்துறை அமைச்சர் திரு. பி. வி. சௌதிரி அவர்களும் துவக்கி வைத்தனர். இவ்வெள்ளி விழா சம்பந்தப்பட்ட நினைவுப் பதக்கம் ஒன்றினை ஜனாதிபதி அவர்களுக்கு திரு. எம். சென்னா ரெடடி அவர்கள் வழங்கினார். பல்கலைக் கழகத்தின் பதிவாளர் டாக்டர் எம். ஜே. கேசவ மூர்த்தி அவாகள் நன்றி கூறினார்.

## ஆஸ்தான வித்வான்

திருமலை திருப்பதி தேவஸ்தானம் மறறும ஸ்ரீமதாந்தர வேத சாஸ்திர பரிஷத்தின் ஆதரவில் 25-8-79 அன்று காகிநாடாவில் சூர்யகலா மந்திரத்தில் நடைபெற்ற விழாவின் போது, தி.தி. தேவஸ்தானம் மற்றும ஸ்ரீ சைலம் தேவஸ்தானங்களின் ஆஸ்தான வித்வானாக அண்மையில் நியமிக்கப் பெற்ற வடமொழி மற்றும் வேதபண்டிதரான உப்பலூரி கணபதி சாஸ்திரி அவர்கள் ஆந்திர மாநில முதல்வர் டாக்டர் எம். சென்னா ரெட்டி அவர்களால் கௌரவிக்கப் பட்டார். முதல்வர் அவர்கள், திரு. கணபதி சாஸ்திரி அவர்களுக்கு தேவஸ்தானத்தின் சார்பில் புத தாடைகள் அளித்து, பின்னர் உரை யாற்றுகையில், திரு. சாஸ்திரி அவர் களின் உதவியைக்கொணடு வேதம சம்பந்தப் பட்ட விஷயங்களை சிறு சிறு புத்தகஙகளாக தேவஸ்தானம் வெளியிடவேணடும் என்று கூறினார். பின்னர் திரு. சாஸ்திரி அவர்கள், முதல்வர் அவர்களுக்கும அவருடைய துணைவியாருக்கும் புத்தாடைகள் அளித்து கௌரவித்தார். ஆந்திர வேதவித்வன் மண்டலி சார்பில் திரு. சாஸ்திரி அவர்களுக்கு ''ஆம்நாய சரஸ்வதி'' எனும பட்டம அளிக்கப பட்டது.

இவ்விழா சம்பந்தப்பட்ட மலா ஒன்றினை தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு.பி.வி.ஆர்.கே. பிரஸாத் அவர்கள் வெளியிட்டார்.இது போது திரு. ஸ்ரீபாஷ்யம் அப்பளாச்சார்யலு, திரு. வி. சுப்ரமணய சாஸ்திரி, திரு. டி. ராமசந்திர சாஸ்திரி (திருமலை ஸ்ரீவேஙகடேஸவரா பாடசாலை முதல்வர்) ஆகியோர் பங்கேற்றனா.

## கோதாவரி புனல் விழா

பன்னிரண்டு ஆணடுகளுக்கு ஒரு முறை பன்னிரண்டு ஜீவநதிகளுக்கு—புணணிய நதிகளுக்கு—புராணப் பின்னணியில் விழா எடுப்பது பன் னெடுங்காலமாகவே இருந்து வருகிறது. இவ்வகையில் இவ்வாண்டு ஆகஸ்ட் மாதம் 29-ம் தேதியிலிருநது செப்டம்பர் மாதம் 9-ம் தேதிவரை 12 நாட்களுக்கு ஆந்திர மாநிலத்திலுள்ள ராஜமண்டாரியிலும், கொவ்வூரிலும் கோதாவரி நதிக்கு விழா எடுப்பிக்கப்பட்டது. இந் நாட்களின் போது இப்புண்ணிய நதியில் நீராடினால் மற்றும் மூதாதையர்க்கு வைதிகச் சடங்குகள் செய்வதாலும் உடல்மாசு மற்றுமின்றி உள்ள மாசும்அகன்று, நாடும் வீடும் நலமெய்தி தீதின்று விளங்கும் என்று நம்பப்படுகிறது. தி. தி. தேவஸ்தானம் தன்பங்காக பல்லாயிரக் கணக்கான ரூபாய் செலவில் கோதாவரி நதிக்கரையில், பழைய மார்க்கண்டேயா கோயிலுக்கருகே ஸ்ரீ வேங்கடேஸ்வரா படித்துறை ஒன்றினைக் கட்டுவித்தது மட்டு மல்லாமல், இப்பன்னிரண்டு நாட்

களின் போது ராஜமணடாரியில் சுப்ர மணயத்திடலில், திருமலைக் கோயி லினைப போன்ற மாதிரி கோயில் ஒன றினைக் கட்டுவித்தது. இவ் விழாவின்போது நகருக்கு வருகை புரிநத லட்சக்கணக்கான யாத்திரி கர்கள் இக்கோயிலுக்கும வருகை புரிந்து திருமலையில் ஸ்ரீவேங்கடேஸ் வரரைத் தரிசித்த உணாவுடன, இறைவனைத் தரிசித்தனர். கோயிலை அடுத்து பல சமய, கலாசார நிகழச சிகள காலை முதல் நள்ளிரவு வரை இப்பன்னிரண்டு நாட்களின்போது நடைபெறும் வகையில தி. தி. தேவஸதானத்தின் ஆதரவில பெரிய பநதல் வேயப்பட்டு, தலைசிறநத கலைஞர்களாலும் இசை அறிஞர்களா லும இன்னிசைக்கச்சேரிகளும் கலை நிகழ்ச்சிகளும நடைபெற்றன.

மேலும இநதுசமயக கோடபாடு கள், சமய இலக்கிய பெருமைகள் எங்கும பரவிடும் வகையில் முயற்சி எடுததுவரும் தி. தி. தேவஸதானம தனது நூல்வெளியீடுகள், ஸ்ரீ வேங்க டேஸவரரின மூவணண திருவுருவப படஙகள் ஆகியவற்றை சாமானிய ருக்கும் கிடைககச செய்யும வகை யில் மலிவு விலையில் இவவிழாவின் போது விற்க ஏற்பாடு செய்யப் பட்டது. மேற்கூறிய பந்தலை அடுத்து நூல விற்பனை நிலையம் ஒனறு அமைககப்பட்டு, மேற்கூறிய தேவஸ் தானத்தாரின் நூல வெளியீடுகள் இப்பன்னிரண்டு நாட்களின் போது ஆயிரககணக்கில் விறகப்பட்டன

இவ்விழாவினபோது உளளூா மக்களுக்கும்,அருகு உளள நகர்வாழ் மக்களுக்கும உதவும வகையில், திருமலைக் கோயிலின் லட்டு, வடை, கறகணடு ஆகிய பிரஸாதங்கள ஏராளமாக விறகப்பட்டன.

மேற்கூறிய மாதிரி கோயிலுக்கும, கலைநிகழசசிகளுககும், விற்பனை நிலையத்திற்கும அநதிர மாநில முதல்வா டாக்டா. எம. சென்னு ரெடடி, அறநிலைய ஆணையர் திரு. எம் சந்திரமௌளி ரெட்டி மற்றும் மாநிலத்தின பல்வேறு துறைகளைச் சார்நத உயர் அலுவலர்கள் வருகை புரிநது, தேவஸதானததின் சீரிய சமயத் தொணடினைப் பாராட்டினா. மேற்கூறிய ஏற்பாடுகள யாவும் தி.தி.தே. செயலாட்சித்தலைவர் திரு. பி வி. ஆா. கே. பிரஸாத அவர் களின் ஆதரவில், தி.தி.தே. பொது ஜனத் மொடாபு அலுவலா திரு. ஆர். சூாயநாராயண மூர்ததி அவா களின கடும முயற்சியால மேற கொள்ளப்பட்டன.

## புதிய பேருந்துகள்

23-9-79 முதல் 1-10-79 வரை திருமலையில் நடைபெறும் ஸ்ரீ வேங்க டேஸ்வரரின வருடாநதிர பிரம மோற்சவத்திறகாக திருமலைக்கு வரும் இலட்சக்கணக்கான யாத்திரி கர்களின் வசதிகளுக்காக ஆந்திர மாநில பேருந்து போக்குவரத்துக் கழகததாா மேலும் 35 புதிய பேருநதுகள் உள்ளிடட 100பேருந்து போக்குவரத்தினை திருப்பதிக்கும திருமலைக்கும் செயற்படுத்தியுள்ள னா. இப்புதிய பேருந்துகளை செயற் படுத்தியதை ஒட்டி திருப்பதியில் விழா ஒன்று ஏற்பாடு செய்யப் பட்டது. இப்புதிய பேருநது போக்கு வரத்தினை தி. தி. தே. செயலாட்சித் தலைவா திரு. பி வி. ஆர். கே பிரஸாத அவாகள் துவககி வைகக, இலவிழாவிற்கு, கடப்பா, ஆந்திர மாநில பேருந்து போக்குவரத்துக கழகத்தின் வட்டார மேலாளர் திரு. ஏ. ராகவா அவாகள் தலைமை தாங்க திருப்பதி சடடமனற உறுப்பினர் திரு. ஏ. ஈஸவரரெடடி அவாகள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றுா.

## வேதரக்ஷண திட்டம்

வேதததின பெருமையையும், வேதம் பயினற சான்றோரை ஊககு விககும் வகையிலும் நாட்டிலுள்ள பல முக்கியமான கோயிலகளில், அங்கங்கு உள்ள புகழபெறற பீடா திபதிகள, மடாதிபதிகள அல்லது புகழ்பெற்ற சமயததலைவாகளின மேற்பார்வையில் தேவஸ்தானத்தின் செலவில வேதபாராயணதாரர்களை நியமிபபதென்று தி. தி. தேவஸதான மேலாணமைக குழு முடிவு செய் துள்ளது. மேலும இப்புனித நோக கத்தில, வேதததின் அருமை பெரு மைகளை வளாத்திடும் வகையில் வேதம சமபநதபபடட பயிற்சி வகுப்புககளை நடத்த முயற்சி எடுத்து வரும் ஆந்திர மாநிலத்திலுள்ள ஏர்பேடு கிராமத்தில் உள்ள வியா ஸாஸரமம கொணடு விளஙகும் 'பிரம்ம வித்ய' உதவித் திடடததிற் கும், செகநதிராபாத் காஞ்சி காம கோடிமநதிரத்தாரின் 'வேத சாஸ்த்ர ஆகம பிரயோக' திடடத்திறகும தி.தி. தி. தேவஸதானம் நிதி உதவி அளிகக முன் வநதுள்ளது.

## பஞ்சரத்னமாலா

புகழபெற்ற காணடக இசை அறிஞரான திருமதி. எம். எஸ. சுப்பு லட்சுமி அவாகளால பாடப்பெற்ற அன்னமாச்சார்யா கீர்த்தனைகளையும, தேர்ந்த ஸதோத்தரப்பாக்களையும கொணட 5எல்.பி.இசைத்தட்டுக்களை தி.தி. தேவஸ்தானத்தாரின் பொருட செலவில் வெளி வர உள்ளன. இவற றில் முதலாவதான ஸ்ரீ வேங்கடேஸ வரா பஞ்சரதனமாலா இசைததட்டு 1-10-79 அன்று,அதாவது விஜயதசமி நாளன்று திருமலையில் ஸ்ரீ வேங்க டேஸ்வரருககுச் சமர்ப்பிககப்படும். பினனர் இவ்இசைத்தடடு 4-10-79 அன்று புதுத்தில்லியில் இநதிய ஜனுதிபதி திரு என். சஞ்சீவிரெட்டி அவர்களாலும, 6-10-79 அனறு ஹைதராபாத்தில் ஆந்திர முதலவா டாக்டர். எம். சென்னுரெடடி அவா களாலும், 8-10-79 அன்று புடட பூாததியில பகவான் ஸ்ரீ சத்ய சாயி பாபா அவர்களாலும வெளியிடப படும். இவ்வெளியீடு சம்பநதப்பட்ட விழாக்கள் பம்பாய, கல்கத்தா, பெங்களூர், சென்னை ஆகிய நகரங் களில 5-10-79 முதல் 12-10-79-க்குள் நடைபெறும. மேலும இவ வெளியீடு சம்பந்தபபடட விழாக்கள அமெரிக்காவில் பீட்ஸ்பாக்கில ஸ்ரீ வேஙகடேஸ்வரா கோயில் கலை அரங்கிலும (வட அமெரிக்காவின கோயில் குழுவின் தலைவா திரு சி.வி. நரசிம்மன் அவர்களாலும்) இலணட னில் பாரதீய வித்யா பவனிலும (லார்டு ஹோர்வுட் அவாகளாலும்) நடைபெறும்.

## தீபாவளி ஆஸ்தானம்

20-10-79 அனறு திருமலையில ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் தீபாவளி ஆஸ்தானம் நடைபெற உள்ளது. இதனுல் 19-10-79 அன்று திருமலையில், கல்யாணுேறசவம், திருப்பாவாடை ஸகஸ்ர கலஸாபி ஷேகம், பிரமமோற்சவம, வசந தோற்சவம், ஊஞ்சல் சேவை, தெப போற்சவம், வாகன சேவைகள், அமந்த்ரோணுேற்சவம போன்ற ஆர்ஜித சேவைகள் நடைபெற மாட்டா.



# ராசிபலன் (1-10-79 முதல் 31-10-79 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., PhD,
திருப்பதி

## மேஷம்

**(அசுவனி, பரணி, கார்த்திகை முதல பாதம் முடிய)**

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் கருத்து வேறுபாடுகள் அல்லது பண நஷ்டம அல்லது பிள்ளைகள் அல்லது பெணகளுடன் பிரிவு; குருவினுல் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், அல்லது வேலை யாட்கள் அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது வாகன வாய்ப்பு அல்லது புதிய வீடு, செவ்வாயினுல் உடல் நலம் கெடல் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல் அல்லது தீய நட்புறவினுல் கவலைகள், சூரியனுல் 17-ம் தேதி வரை உடல்நல மேன்மை மறறும் வெறறி பின்னர் உடல நலம கெடல் அலலது வயிறு சம்பந் தப்பட்ட நோயினுல் அவதியுறல், சுக்கிரனுல் உடல் நலம் கெடல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல் அல லது பெணகளினுல் கவலைகளுக்குள் ளாதல்; புதனுல் 20-ம் தேதி வரை கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல். பின்னா பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மககட்பேறு.

## ரிஷபம்

**(கார்ததிகை 2-ம பாதம முதல, ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம பாதம முடிய)**

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள், சனியினுல் பண நஷ்டம், நண்பர் களுடன் கருத்து வேறுபாடுகள் அல்லது உற்ருர் உறவினருடன் பிரிவு; குருவினுல உறவினர்களால் கவலைகளுக்குள்ளாதல்; செவ்வா யினுல தவருன வழியில் அல்லது பிள்ளைகளமூலம் பணம் கிடைக்கப் பெறல்; சுக்கிரனுல் 6-ம் தேதி வரை புதிய உறவுகள் அல்லது பெரியோர் களது பாராட்டுதல களுக்குள்ளாதல் அலலது பண வரவு அல்லது நணபர் கள் அல்லது மக்கட பேறு அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் பின்னர் கருதது வேறுபாடுகளை அல்லது உடல் நலம் கெடல், சூரியனுல 17-ம் தேதி வரை உடல் நலம் கெடல் அல்லது எதிரிகள் காரணமாக கவலைகளுக் குள்ளாதல ஆனுல பின்னர் உடல்நல மேன்மை, வெற்றி; புதனுல் 24-ம் தேதி வரை பண வரவு, வெற்றி, பின்னர் கருத்து வேறுபாடுகள்.

## மிதுனம்

**(மிருக சீரிஷம் 3-ம் பாதம முதல, திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)**

ராகுவினுல பண வரவு, சனியினு லும் பண வரவு, வெறறி, உடல்நல மேனமை அலலது வேலையாடகள் அல்லது வாகன வாயபபு, குருவினுல் ஏமாற்றங்கள், செவ்வாயினுல்கருத்து வேறுபாடுகள அலலது அலுவலகக் கவலைகள் அல்லது உடல்நலம் கெடல் அல்லது வீட்டில் திருடு போதல்; சுக்கிரனுல புதிய நண்பர்கள், உற வினர் வருகை மறறும் பெரியோர் களது பாராட்டுதல்களுக்குள்ளாதல், சூரியனுல் உடல் நலம் கெடல், அல்லது எதிரிகளினுல் கவலைகளுக் குள்ளாதல்; புதனுல் 24-ம் தேதி வரை மனைவியுடன் அல்லது பிள்ளை யுடன் கருத்து வேறுபாடுகள். ஆனுல் பின்னர் பண வரவு மற்றும் வெற்றி.

## கடகம்

**(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம முடிய)**

ராகுவினுலும் சனியினுலும் பண நஷ்டம்; குருவினுல், சனியினுலும் ராகுவினுலும் ஏற்படும் தீய விளைவு களை சமாளிக்கும் வகையில் நன்மை பயத்தல், செவ்வாயினுல் உடல்நலம் கெடல, சுக்கிரனுல் நல்ல நண்பர் கள், பணவரவு அலலது புதிய ஆடை ஆபரணங்கள அலலது வெறறி; சூரி யனுல் 17-ம தேதி வரை பண வரவு, மதிப்புயர்தல பின்னர் உடல்நலம் கெடல்; புதனுல் 24-ம் தேதி வரை பண வரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி. பின்னர் மனைவி பிள்ளையுடன் கருத்து வேறுபாடு கொளல்.

## சிம்மம்

**(மகம, பூரம், உத்திரம முதல பாதம் முடிய)**

ராகுவினுல கவலைகள; சனியினுல் பிரயாணம் மற்றும் உடல் நலம கெடல அல்லது பண நஷ்டம் அல்லது பிள்ளைகளிடமிருநது கருத்து வேறு பாடுகள் அல்லது உற்ருர் உறவின ரிடமிருந்து பிரிவு அல்லது உறவினர் களை ஏமாறறுதல்; குருவினுல் கருத்து வேறுபாடுகள், பண நஷ்டம, மதிப் பிழத்தல், செவவாயினுல பொருள் வறட்சி அல்லது மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை அல்லது கண வலி யினுல அவதிப்படல் அல்லது உடல நலம் கெடல்; சுககிரனுல் பண வரவு அல்லது மதிப்புயர்தல் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது வெற்றி அல்லது மக்கட்பேறு; சூரியனுல் 17-ம் தேதிவரை பணநஷ்டம், கண் வலியினுல் அவதிப்படல் அல்லது ஏமாற்றம். பின்னா பணவரவு, வெற்றி; புதனுல் நண்பர்கள் ஆனுல் தன்னுடைய தவருன நடவடிக்கை களின் காரணமாக அஞ்சுதல். பின் னர் வெற்றி, மதிப்புயாதல்.

## கன்னி

**(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ் தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)**

ராகுவினுல் பொருள் நஷ்டம்; சனியினுல் கவலைகள்; குருவினுல் பிரயாணம்; உடல் நலம் கெடல்; செவ்வாயினுல் பணவரவு, வெற்றி;

சுக்கிரனால கேளிக்கைகளில் ஈடு படல், பண வரவு, மதிப்புயர்தல், வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள், சூரியனால் வயிறுசம்பந்தப்பட்ட நோயினால் அவதிப்படல அல்லது கணவலியினால் அவதியுறல், புதனால் 24-ம் தேதிவரை மதிப்பிழத்தல, பின்னா நணபர்கள், தன் தீயநட வடிககையின் காரணமாக அஞ்சுதல்.

## துலா

**(சித்திரை 3-மபாதம் முதல், ஸவாதி விசாகம் 3-ம் பாதம் முடிய)**

ராகுவினால் சுகம; சனியினால பணவரவு, கேளிக்கைகளில் ஈடுபடல; குருவினால் பணவரவு, செவ்வாயினால் பணவரவு; சூரியனால் பிரயாணம், வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல் அல்லது பணநஷ்டம்; சுக்கிரனால் 6-ம் தேதிவரை கேளிக்கைகளில் ஈடுபடல், பணவரவு அல்லது மதிப்புயாதல அலலது மக்கட்பேறு; புதனால் 24-ம் தேதி வரை கருத்துவேறுபாடுகள தீய ஆலோசனைகளைக் கேடடதன்பேரில் பொருள் நஷ்டம். பின்னா மதிப பிழத்தல.

## விருச்சிகம்

**(விசாகம் 4-ம் பாதம முதல், அனுஷம் கேட்டை முடிய)**

ராகுவினால் கருத்து வேறுபாடுகள்; சனியினால் பணநஷ்டம் மதிப்புக் குறைதல; குருவினால பொருள நஷ்டம், மதிப்புக்குறைதல், செவவாயினால் பொருள் நஷ்டம் அலலது மதிப்பிழத்தல; சூரியனால் 17-ம தேதிவரை உடல்நலம மேனமை, மதிப்புயாதல், வெறறி. பின்னா பொருள் நஷ்டம்; சுக்கிரனால் 6-ம தேதிவரை பொருள வரவு, நணபாபர்கள், புதிய ஆடை ஆபரணங்கள், பின்னர் 24-ம் தேதிவரை எவ்வித நன்மை தீமையும் ஏற்படாது. பினனர் மகிழ்சசி, நிம்மதி; புதனால் 24-ம் தேதி வரை எதிரிகள், மதிப்புக் குறைதல் அல்லது உடல நலம் கெடல். பினனர் கருத்து வேறுபாடுகளினால் அலலது தவறான ஆலோசனையைக கேட்டதன பேரில் பண நஷ்டம்.

## தனுசு

**(மூலம், பூராடம, உத்திராடம முதல் பாதம் முடிய)**

ராகுவினால் தீய நடவடிக்கைகளில் ஈடுபடல், சனியினால எதிரிகள அலலது உடல் நலம் கெடல; குருவினால பண வரவு, வெற்றி அல்லது மக்கட் பேறு; செவ்வாயினால பண நஷ்டம, இகழச்சிக்குள்ளாதல, உடலில காயம் ஏற்படல, சூரியனால மதிப்புயர்தல், பண வரவு, வெறறி, உடல்நல மேன்மை; புதனால் 24-ம் தேதி வரை பண வரவு, அல்லது கேளிககைகளில ஈடுபடல் அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட் பேறு. பின்னர் எதிரிகள், உடல்நலம் கெடல், மதிப்புக் குறைதல்; சுக்கிரனால் 6-ம தேதி வரை மதிபபுக்குறைதல, கருத்து வேறுபாடுகள் பின்னா 24-ம் தேதி வரை பண வரவு, நண்பர்கள், புதிய ஆடை ஆபரணங்கள் பின்னா எந்தவித நன்மை தீமையும் ஏற்படாது.

## மகரம்

**(உத்திராடம 2-ம் பாதம முதல திருவோணம, அவிட்டம் 2-ம பாதம முடிய)**

ராகுவினால கவலைகள்; சனியினால உற்றார உறவினரிடமிருந்து பிரிவு, குருவினால் உடல் நலம் கெடல, பிரயாணம், செவவாயினால் மனைவியுடன் கருத்து வேறுபாடு, வயிறு அல்லது கண சம்பநதப்பட்ட நோயினால அவதியுறல; சூரியனால் 17-ம் தேதி வரை உடல நலம கெடல அல்லது பண நஷ்டம் அல்லது ஏமாற்றங்கள், பின்னர் வெற்றி, புதனால் பண வரவு, வெற்றி, சுகம், வாகன வாய்ப்பு அல்லது மக்கட பேறு, சுககிரனால் 6-ம தேதி வரை பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள அல்லது கேளிககைகளில ஈடுபடல அல்லது நல்ல நடவடிக்கைகளில ஈடுபடல. பினனர் 24-ம தேதிவரை கருத்து வேறுபாடுகள், மதிப்புக் குறைதல பினனா நண்பாகள, பணவரவு அலலது புதிய ஆடை ஆபரணங்கள.

## கும்பம்

**(அவிட்டம 3-ம பாதம முதல, சதையம, பூரட்டாதி 3-ம பாதம் முடிய)**

ராகுவினால கருத்துவேறுபாடுகள, சனியினால் பிரயாணம், குருவினால பணவரவு, கேளிக்கைகளில் ஈடுபடல; செவ்வாயினால் பணவரவு, வெற்றி, சூரியனால் 17-ம தேதிவரை உடல நலம் கெடல் அலலது மனைவிக்கு மன மகிழசசியின்மை பின்னர் பண நஷ்டம அலலது ஏமாற்றஙகள் அல்லது உடல்நலம கெடல, புதனால 24-ம் தேதிவரை ஏமாற்றங்கள். பினனர் பணவரவு, வெறறி, கேளிககைகளில ஈடுபடல; சுககிரனால பொருள் வரவு அலலது கேளிக்கைகளில ஈடுபடல, அல்லது புதிய வீடு அல்லது நல்லநடவடிக்கைகளில் ஈடுபடல், அலலது புதிய ஆடை ஆபரணங்கள.

## மீனம்

**(பூரட்டாதி 4-ம பாதம முதல, உததிரட்டாதி, ரேவதி முடிய)**

ராகுவினால பணவரவு, சனியினால உடலநலம் மேன்மை, வெற்றி; குருவினால் மனயமைதியிழத்தல்; செவ்வாயினால் எதிரிகள் அல்லது உடல நலம் கெடல் அல்லது பிளளைகள் அல்லது பெண்கள காரணமாக கவலைகளுககுள்ளாதல; சூரியனால 17-ம் தேதிவரை பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால அவதியுறல். பின்னர் மனைவிக்கு மன மகிழசசியின்மை அல்லது உடல்நலம கெடல்; சுககிரனால் 6-ம தேதிவரை பெணகள் மூலமாக கவலைகள். பின்னர் கேளிக்கைகளில ஈடுபடல், அல்லது புதிய ஆடை ஆபரணங்கள அலலது புதிய வீடு; புதனால் 24-ம தேதிவரை பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது வெற்றி அல்லது மககட்பேறு. பினனர் முயறசிகளுககு இடையூறுகள் ஏற்படல்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER. T. T. D. PRESS, TIRUPATI-517501.



இநதிய ஜனாதிபதி திரு.என. சஞ்சீவி ரெட்டி அவர்கள திருமலையில 1—9—1979 அனறு தி. தி. தே. மேலாணமைக குழுத தலைவா டாகடா.என.ரமேஸன மறறுமதி.தி. தே. செயலாட்சித்தலைவா திரு.பி.வி. ஆா. கே. பிரஸாத் அவாகளால் வரவேறகப்படுகிறா.



அண்மையில் முன்னாள் இந்தியப் பிரதமர் திருமதி. இந்திரா காந்தி அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்த போது.



முன்னாள இந்தியப பிரதமர் திரு. மொரார்ஜி தேசாய திருமலைககு வருகை புரிந்த போது.

# திருமலையில் யாத்திரிகர்களுக்கான வசதிகள்

* இரவு 8-30 மணி வரை செயற்படும் அஞ்சல் அலுவலக வசதி மட்டுமன்றி யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில் இரவு 10-30 மணி முதல் நள்ளிரவு 1-00 மணி வரை அஞ்சல் அலுவலகம் செயற்படல்
* "க்யூ" வில் தங்களுடைய சாமான்களை யாத்திரிகர்கள் சுமந்து செல்வதைத் தவிர்க்க உதவும் வகையில் சாமான்களை வைத்துச் செல்வதற்காக இலவச அறை வசதிகள். "க்யூ' அறைகளின் முன் காலணிகளை விட்டுச் செல்வதற் கான வசதிகள்
* தலாளிகள், ஏமாற்றுப் பேர்வழிகள் போன்றோரின் தவறான நடவடிக்கைகளைத் தடுக்கவும், புகார்களை ஏற்றுக்கொண்டு அதற்குரிய நடவடிக்கைகளை மேற் கொள்ளவும் "பெயிஷ்கார்" நிலைப்பிரிவில் ஓர் அலுவலர் கோயிலுக்குமுன்-முகத்துவாரம்- அருகே நியமிக்கப்பட்டுள்ளார்.
* "க்யூ" கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களின் சௌகர்யங்களைக் கவனிக் கவும், அதற்கான வசதிகளை மேற்கொள்ளவும் "பெயிஷ்கார்" நிலைப்பிரிவில் ஓர் அலுவலர் நியமிக்கப்பட்டுள்ளார்.

## "க்யூ" கொட்டகைகளில் வசதிகள்

* உட்கூரைகளில் பொருத்தப்பட்ட மின்சாரவிசிறிகள் மட்டுமின்றி, காற்றோட்ட மிக்க விசாலமான சுகாதாரத்துடன் கூடிய பெரிய "க்யூ" அறைகள்
* காஃபி போர்டு நிறுவனத்தாரால் அறைகளுக்குள் உணவுவிற்பனைச் செய்யப்படல்
* நியாயமான விலைகளில் உணவுப் பொட்டலங்கள் கிடைக்கப் பெறல்
* சுத்தமான பால், ஆந்திர மாநில பால்வள நிறுவனத்தாரால் விற்பனைச் செய்யப் படல்
* தி. தி. தேவஸ்தானத்தாரால் இறைவனின் திருவுருவப்படங்கள், நூல் வெளி யீடுகள் விற்பனைச் செய்யப்படல்
* "க்யூ" வரிசைகளில் கூட "ஒதுங்கு" (Toilet) வசதிகள்
* குறிப்பிட்ட எல்லைக்குள் திரையிடப்படும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள்
* பக்தி நிகழ்ச்சிகளும், இசையும் ஒலிபரப்பப்படல்
* தேர்ந்த மருத்துவரின் கீழ் ஒரு வைத்தியசாலை